# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI 9.9.2007
ரூ.8.00
80 பக்கங்கள்

# இந்தியாவைப் பிளக்கும் இஸ்லாமிய தீவிரவாதம்!

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

அடுத்த
இதழில்
ஆரம்பம்...

டாக்டர்
**சுதா சேஷய்யன்**
வழங்கும்



# ஸ்ரீ லலிதா

(லலிதா சகஸ்ரநாம விளக்கம்)
இரண்டாம் பாகம்

அற்புத ஆன்மிகத் தொடர்...
வேதாவின் கலைநயமிக்க படங்களுடன்




**டைட்டானியம் தொழிற்சாலை**

★ ஐம்பதாண்டு வியாபாரத்துக்காக இருபதாயிரம் குடும்பங்களைப் பிணையாக்க வேண்டுமா? - **வானவில் மூர்த்தி கூத்தப்பாக்கம்.** ★ 'டைட்டானியம்' விஷயத்தில் அரசு எல்லாக் குழப்பத்தையும் போக்கி மக்களின் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டும் - **உமரி பொ.கணேசன், மும்பை** ★ 'டைட்டானியம்' பிரச்னை என்னவென்பது தெரியாமலே மக்கள் விவாதித்துக் கொண்டிருக்கின்றனர் என்பது கல்கி மூலம் தெரிய வருகிறது - **இரா. கல்யாணசுந்தரம், மதுரை**

**தலையங்கம்**

★ அரசின் தவறான திட்டங்களை ஆணித்தரமாக எடுத்துரைத்தது தலையங்கம் - **ஜெகா, கும்பகோணம்.** ★ அரசியல்வாதிகள் தம் மக்களை மதித்து நன்மக்களாக உயர்த்தட்டும். அதன் பிறகு வல்லரசாவது குறித்து யோசிப்போம் என்றது வைர வார்த்தைகள்! - **துரை. ராமகிருஷ்ணன், ஏரகுடி** ★ போஃபர்ஸ் வழக்கில் சி.பி.ஐ.-ன் கையாலாகாதனத்தை கார்ட்டூன் கச்சிதமாகக் காட்டியது - **இரா. சக்கரபாணி, மதுரை, இராஜேந்திரன், வால்குடி**

# பிரதமருக்கு அனுப்புங்கள்!



**தராசு பதில்கள்**

★ வாசகர் கேள்விக்கு தராசாரின் பதில்கள் நறுக்குத் தெரிந்த நங்கை - **குலசை நஜ்முதீன், காயல்பட்டினம்** ★ குத்துப்பாட்டு பற்றிய தராசின் பதில் 'கும்மாங்குத்து' - **எஸ்.சங்கர், மதுரை** ★ பெண்கள் வேலைக்குச் செல்வது தொடர்பான கேள்விக்குத் தராசின் பதில் முற்றிலும் உண்மை அல்ல - **கே.ரமேஷ், சென்னை**

**அணு ஒப்பந்தம்**

★ அமெரிக்காவின் வேலைவாய்ப்பை வரவேற்கும் நாம், அணுசக்தி ஒப்பந்தத்தை எதிர்ப்பது அபத்தமாக உள்ளது - **ஆர்.நாகராஜன், சென்னை** ★ அணு ஒப்பந்தம் பற்றிய பி.எஸ்.ராகவன் கருத்தை பிரதமருக்கு அனுப்புங்கள் - **ப.மூர்த்தி, பெங்களூரு.** ★ கம்மா ஆடுமா சோழியன் குடுமி? இலாபமில்லாமல் இந்த வியாபாரத்தில் இறங்குவாரா புஷ்? - **எஸ்.மீனாட்சிசுந்தரம், காஞ்சிபுரம்**

**ஆசிரியர் பக்கம்**

★ கோயிலில் நடக்கும் கொடுமையைக் காண்பதைவிட நீங்கள் கூறுவதுபோல்

கிளைச்சாலை அடுத்த இதழில்...

கோபுர தரிசனம் கோடி புண்ணியம் - **என்.நாக ராஜன், மயிலாப்பூர்** ★ இறைவனுக்கும் இயற்கைக்கும் முன்னால் மனிதன் வெறும் தூசு என்பதை உணர்த்தியது ஆசிரியர் பக்கம் - **சரவணன், திருவாரூர்** ★ வி.ஐ.பி.க்கள் என்ற பெயரில் குறுக்கு வழியில் தரிசனம் பெறு பவருக்கு கர்வமும், அகந்தையும் வெளிபடுமே தவிர பக்தி அல்ல - **அ.சம்பத், திரவரங்கம்**

### கதைகள்

★ ஸ்ரேயாவைப் போல் ஒரு பெண் - யதார்த்தம் நிரம்பிய காதல் கதை. எதிர்பாராத முடிவு - **ஆர்.ராஜலட்சுமி, விழுப்புரம்** ★ 'கல்' சிறுகதை கல் மனதையும் கரைய வைக் கும்! **மு.மதிவாணன், அரூர்** ★ 'கல்' சிறுகதை நெஞ்சைத் தொட்டது. இதுபோன்று எத்தனைக் குடும்பங்கள் இருட்டில் இருக்கிறதோ? **-ராமமூர்த்தி, சென்னை**

### மற்றவை...

★ சீனா தன் முன்னேற்றத்துக்கு கொடுத்த விலை மனிதர்கள் என்ற செய்தி நெஞ்சைத் தொட்டது - **ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வண்டியூர்** ★ இருபத்தொன்பது கடிதங்களைத் தாங்கி வந்த உள்ளடக்கிய வட்டமேஜை எந்த இதழும் செய்யாத விஷயம் - **எஸ்.சங்கர், மதுரை**

★ 'சந்தோஷக் குடுவை' கவிதை வித்தி யாசமான பார்வை - **இந்திரன், நாகர் கோவில்**

★ சிவப்பழகு தேவையில்லை. வாய்ப் பும் திறமையும் அதற்கேற்ற உழைப்பும் இருந்தால் சினிமா வசப்படும் என்பதைக் காட்டியது 'சினிமாவும் சிவப்பழகும்' கட்டுரை - **ஜான்சன், கோவில்பட்டி** ★ 'தகவல் பெற பத்து ரூபாய்' தெரியாத பல தகவல்களைத் தெரிய வைத்தது - **தி.மா.முருகானந்தம், திருவைக்காவூர்** ★ தி.மு.க.வின் எதேச்சதிகாரத்தை 'திண்டாட்டத்தில் தமிழக அரசு' நிதர் சனமாக உணர்த்தியது - **எம்.சிவ குருநாதன், தஞ்சை**

## ஸ்பீட் போஸ்ட்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

ஆசிரியர் குழு :
**சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# இந்தியாவைப் பிளக்கும்

**மீ**ண்டும் பயங்கர குண்டு வெடிப்பு, அப்பாவிகள் நாற்பதுக்கும் மேற்பட்டோர் பலி. இந்த முறை ஹைதராபாத் அச்சத்தின் பிடியில் மாட்டிக்கொண்டு தவிக்கிறது. இதுபோன்ற குண்டு வெடிப்புகள் அமைதியான வாழ்க்கைக்குப் பெரிய சவாலாக அமைந்து, இந்தியாவுக்குள் சுதந்திரமாகச் சுற்றி வருவது கூட உயிருக்கு ஆபத்தாய் முடியும் என்கிற நிலை! ஒவ்வொரு குண்டு வெடிப்புக்குப் பின்னரும் 'இஸ்லாமிய தீவிரவாதம்' என்ற குற்றச்சாட்டு ஓங்கி ஒலிக்கும்போது, அதை முழுமையாகவும் ஒரே குரலிலும் கண்டிக்கும் தைரியம் அந்த மதத்தைச் சார்ந்தவர்களிடம் ஏன் இல்லை? இஸ்லாமியப் பிரதிநிதிகளிடம் கேட்டோம்...



"இந்தக் கண்ணோட்டம் முற்றிலும் தவறானது" என்கிறார் தமிழ்நாடு முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தின் தலைவர் பேராசிரியர் ஜவாஹிருல்லா. "இதுபோன்ற ஒவ்வொரு கொடூர சம்பவத்துக்குப் பிறகும், அனைத்து முஸ்லிம் அமைப்புகளும் கடுமையான கண்டனம் தெரிவித்து அறிக்கை விடுகின்றன. ஆனால், அச்சு மற்றும் காட்சி ஊடகங்கள் செய்தியை மக்களிடம் கொண்டு சேர்ப்பதில்லை. எந்த ஒரு பிரச்னைக்கும் வன்முறை ஒரு தீர்வாக முடியாது. போர் புரியும்போதுகூட பெண்கள், குழந்தைகள், நோயாளிகள், மரம்செடிகளுக்குக்கூட ஆபத்து

* சல்மா

# இஸ்லாமிய தீவிரவாதம்!

விளைவிக்காமல் போர் புரிய வேண்டும் என்று இஸ்லாம் சொல்லும்போது, அப் பாவி உயிர்களைப் பறிக்கும் குண்டு வெடிப்புகளை நடத்துபவன் யாராக இருந் தாலும் அவன் தண்டிக்கப்பட வேண்டிய வனே'' என்கிறார் இவர்.

சர்வதேச அளவில் ஒரு மதமே பயங் கரவாதத்தோடு தொடர்புபடுத்தப்பட்டு விமர்சிக்கப்படுகிறது. இந்தியாவில் ஜம்மு-காஷ்மீர் விவகாரம், பாபர் மசூதி இடிப்பு போன்ற விவகாரங்கள் பயங்கரவாதத்துக்குக் காரணமாக அமைந்து விடுகின்றன. உலக அளவில் ஆப்கானிஸ்தான், மற் றும் ஈராக் மீது நடத்தப்பட்ட அமெரிக்க ஆக்கிரமிப்புகள் அல்-கொய்தா போன்ற பயங் கரவாத இயக்கங்கள் உருவாக வும் மும்முரமாகச் செயல் படவும் தூண்டுதலாகி விட்டன. ஒவ்வொரு குண்டு வெடிப்புக்குப் பின் னர் 'இது பாகிஸ்தான் தூண்டிவிட்ட எல்லை மீறிய பயங்கரவாதம்' என்று சொல்வது சுலபமாகி, 'இந்த அமைப்புதான் அல்லது மற்றோர் அமைப்புதான் நடத்தியது' என்றும் மீடியாவால் யூகங்கள் ஊதிவிடப்படுகின்றன.

''நமது காவல் துறை மற்றும் புலனாய்வு அமைப்புகள், பாகிஸ் தான் பின்பலத்தோடு நடத்தப் படும் கொடூர சம்பவங்களை முறியடிக்கும் ஆற்றல்கொண்டவை என்பதில் சந்தேகமில்லை. ஆனால், சம்பவம் நடந்த ஒரு மணி நேரத்துக் குள்ளேயே பல யூகங்களைச் செய்தி யாகப் பரப்பிவிடுவதைப் பார்க்கும் போது போலீஸ் அனைத்துக் கோணங்களி லும் விசாரணையை மேற்கொள்ளாமல், ஒரு சரியான இலக்கு இல்லாமல் செயல் படுகிறதோ என்ற சந்தேகம்கூட தோன்று கிறது'' என்கிறார் ஜவாஹிருல்லா.

''மனித குலத்தின் அமைதிக்குப் பங்கம் ஏற்படும் வகையில் செயல்படும் பயங்கரவாதிகள், பல்வேறு இடங்களில், பல் வேறு பெயர்களில் செயல்பட்டு வருகிறார் கள். இவர்கள் ஒட்டுமொத்த மனித குலத் துக்கே எதிரிகள். மதத்தின் அடிப்படையில் இவர்களைப் பிரிக்கக் கூடாது. இஸ்லாமிய தீவிரவாதி என்று மதத்தை இணைத்துச் சொல்லப்படுவதே ஒரு சமூகத்தைக் குற்ற உணர்வுக்கு ஆளாக்கியிருக்கிறது. மனித குலத்தின் நல்லிணக்கத்தைக் குலைக்கும் வகையில் கடவுளே செயல்பட்டாலும் அவன் கண்டிக்கப்பட வேண்டியவனே'' என்கிறார் கவிஞர் மு.மேத்தா.

''இப்படிப்பட்டவர்கள் சமூக விரோதி கள். அவர்களின் வேர்கள் எங்கே என்று பார்த்து அடியோடு ஒழிக்க வேண்டும். குண்டு வைக்கும் கொடியவர்களை மதத் தோடு தொடர்புப்படுத்தக் கூடாது'' என் கிறார் கவிஞர் சல்மா.

''நாட்டு நடப்பு களை உன்னிப்பாகக் கவனித்து வரும் சராசரி இஸ்லாமியன், தங்கள் மீது அரசு பாரபட்சம் காட்டுகிறதோ என்று நினைக் கிறான். கோய முத்தூர், மும்பை மற்றும் குஜராத் கலவரங்களைத் தொடர்ந்து உரிய நீதியும் நிவாரணமும்

**மனித குலத்தின் நல்லிணக்கத்தைக் குலைக்கும் வகையில் கடவுளே செயல்பட்டாலும் அவன் கண்டிக்கப்பட வேண்டியவனே!**

கிடைக்கவில்லை. ஆனால் இந்தப் பாரபட்சத்தினால் ஏற்படும் மன வருத்தம் இருந்தாலும், வன்முறையைக் கண்டிப்பதில் எந்த மாற்றுக் கருத்தும் கிடையாது. அடிப்படைக் காரணங்களுக்குத் தீர்வு காண்பதை விட்டுவிட்டு விளைவுகளைப் பற்றி விமர்சனம் செய்து ஒரு மதத்தை பயங்கரவாதத்தோடு தொடர்பு படுத்தும் போக்குதான் நிலவுகிறது.'' என்கிறார் ஓய்வுபெற்ற அரசு ஊழியரான ரஹ்மான்.



* ஹசன் அலி

இயக்கங்களுக்கு வசதியாகப் போய்விட்டது.

''பாகிஸ்தானில் அமைதி இல்லாததால் விரக்தியில் எழுதுகிறார்கள். இது கடுமையாகக் கண்டிக்கப்பட வேண்டும். வன்முறையில் ஈடுபடுவோர் ஒரு சிறிய வட்டம்தான். அவர்களால் தேச ஒற்றுமைக்கும் மத நல்லிணக்கத்துக்கும் ஆபத்து விளைவிக்க முடியாது'' என்று உறுதிபடச் சொல்கிறார் ஜவாஹருல்லா.

**செ**ன்ற வருடம் அமெரிக்காவின் அழுத்தம் காரணமாக, பாகிஸ்தான் நம்மோடு அமைதிப் பேச்சுவார்த்தைக்குத் தயாரானது. இந்தியா - பாகிஸ்தான் ஆகிய இருநாடுகளும் இணைந்து பயங்கரவாதத்தை முறியடிக்கும் திட்டங்களைத் தீட்டவும் தயாராக இருந்தன.

இப்படிப்பட்ட செயல்கள் இரு நாடுகளிலும் அமைதியை உண்டாக்கிவிடுமோ என்ற அச்சத்தின் காரணமாக பாகிஸ்தானில் உள்ள மத அடிப்படைவாதிகள், மக்களை 'ஜிகாத்' என்ற பெயரில் தூண்டிவிட்டார்கள். 'இந்தியாவுக்குத் தீவிரவாதிகளை அனுப்பி காஷ்மீரை மீட்போம்; முகலாய ஆட்சியை நிறுவுவோம்' என்று வெளிப்படையாகவே எழுதி வருகின்றன பாகிஸ்தான் பத்திரிகைகள். உள்நாட்டுப் பிரச்னைகளால் முஷாரஃப் முடக்கப்பட்டிருப்பது தீவிரவாத



* ஜவாஹருல்லா

''**ம**தம் என்பது ஒரு வாழ்க்கை முறை. ஒவ்வொருவருக்கும் தாங்கள் நம்பிக்கையுடன் ஏற்றுக்கொண்ட மதவழி நடக்கும் உரிமை உண்டு. சிறுபான்மை சமூகத்தின் மீது குற்றம் சாட்டப்படும்போது வன்முறையைக் கண்டிக்க விரும்பும் ஒருவன்கூட, தாம் ஏதேனும் ஒரு விதத்தில் பாதிக்கப்படுவோமோ என்று அச்சம் காரணமாகப் பின் வாங்குகிறான். இந்தச் சூழலை மாற்ற வேண்டியது கவிஞர்கள், எழுத்தாளர்கள் ஆகியோரது கடமை'' என்கிறார் மு.மேத்தா.

சல்மாவோ, இதுபோன்ற சம்பவங்களால் ஒருமைப்பாட்டுக்கு பாதிப்பே வராது என்கிறார்!

''**அ**து என்ன ஸார் இஸ்லாமிய தீவிரவாதம்? தீவிரவாதத்துக்கு ஜாதியும் கிடையாது, மதமும் கிடையாது. அஸ்ஸாமில் உல்பா தீவிரவாதிகளை இந்துத் தீவிரவாதிகள் என்று சொல்கிறோமா? இஸ்லாம், தீவிரவாதத்தை அடியோடு எதிர்க்கிறது. குண்டு வெடிப்புச் சம்பவம் நடக்கும்போது, இஸ்லாமியத் தோழர்கள், யாரோ ஒருவன் செய்த கொடூரத்துக்காக கூனிக்குறுகி அவமானப்பட்டுப் போகிறார்கள். குண்டு வெடிப்புக்குப் பிறகு எழும் களேபரத்தில் எங்கள் எதிர்ப்புக் குரல்கூட அடங்கிப் போய் விடுகிறது. தீவிரவாதம் பேசுபவனையும், தீவிரவாதச் செயல்களில் இறங்குபவர்களையும் கைது செய்து கடும் தண்டனை கொடுக்க வேண்டும். இந்த நாட்டின் ஒருமைப்பாட்டைக் காப்பதில்

இஸ்லாமியர்கள் யாருக்கும் குறைந்தவர்களல்லர்'' என்று ஆவேசமாகச் சொல்கிறார் இராமநாதபுரம் காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் ஹசன் அலி.

இந்தியாவில் உள்ள 15 கோடி இஸ்லாமியர்களில் 75 சதவிகிதத்தினர் வறுமை கோட்டுக்குக் கீழே உள்ளதாக சச்சார் கமிட்டி அறிக்கை சொல்கிறது. தீவிரவாதிகள் தங்கள் தேவைக்காக ஏழை இஸ்லாமியர்களையும் விலைக்கு வாங்கி, திசை திருப்பும் ஆபத்து இருக்கிறது. அதேசமயம் சிறுபான்மை சார்பு அரசியல் செய்வதாக காங்கிரஸ் மீது குற்றம் சாட்டுகின்றன ஹிந்துத்வா அமைப்புகள். இன்னொரு கோணத்தில் பார்த்தால், கலவரங்களில் பாதிக்கப்பட்ட இஸ்லாமியர்களுக்கு உரிய நீதியும் நிவாரணமும் வழங்கப்படாதது பொருமலாகவே நீடித்து வருகிறது.


✱ மு.மேத்தா

இந்தச் சூழலில் தீவிரவாதத்தின் விளைவாக இந்திய ஒருமைப்பாட்டுக்கு எதிர்காலத்தில் ஆபத்து இல்லாமல் பார்த்துக் கொள்ள, அரசியல்வாதிகளை நம்பிக் கொண்டிராமல் மக்கள்தான் நல்லுறவுக்கு முயன்றாக வேண்டும். இஸ்லாமியத் தலைவர்கள் முன்வந்து பகிரங்கமாக ஹிந்து -முஸ்லிம் ஒற்றுமை அமைப்புகளைத் தொடங்கி, அந்த மேடைகளில் 'ஜிஹாதி'யை நிராகரித்தும் கண்டித்தும் பேச வேண்டும். அந்தக் கொடுமையில் ஈடுபடுவோருக்கும் அதற்கு ஒத்துழைப்புத் தருவோருக்கும் இந்தியாவில் இடமில்லை என்று பிரகடனம் செய்ய வேண்டும். நல்ல மாற்றங்களுக்கு முதல்படியாக இது மட்டுமே அமைய முடியும்.

**- ப்ரியன்**



# திருமாவை அப்செட்டாக்கிய

'அரசியலிலிருந்து விலகி விட்டாரோ' என்று எண்ணும் அளவுக்கு சமீபகாலமாகத் திரைத்துறையில் அதிக நாட்டத்தோடு ஈடுபட்டு வருகிறார் தொல். திருமாவளவன். முதல் படமான 'அன்புத்தோழி' ரிலீஸாகியிருக்கும் சூழலில் அவரைச் சந்தித்துப் பேசினோம்.

**'அன்புத் தோழி' அனுபவம் எப்படி?**

''இந்தப் படத்தில் நான் நடிக்க முடிவு செய்ததற்குக் காரணம், திரைப்படத் துறையைப் பற்றியும் தெரிந்துகொள்ளத்தான். ஆனால், படம் ரிலீஸான சூழலில் திருப்தியற்ற மனநிலையில்தான் இருக்கிறேன். இதற்காக யாரையும் குறை சொல்ல விரும்பவில்லை.''

**ஏன்... என்ன நடந்தது?**

''மொத்த யூனிட்டுமே புதியவர்கள். நானும் புதுமுகம்தானே. படம் முடிவதற்குள் ஏகப்பட்ட குழப்பங்கள். தயாரிப்பாளர் முதற்கொண்டு பலர் இடையில் மாறி மாறி புதியவர்கள் வந்தார்கள். படத்தை இயக்கியவர்களோ, என்னிடம் முழுமையாக வேலை வாங்கத் தயங்கினார்கள். இதற்குக் காரணம் எனக்கிருக்கும் தலைவர் இமேஜ் தான். நான் பேச வேண்டிய வசனங்கள் என்னால்தான் எழுதப்பட்டன.

ஆனால், தணிக்கை அதிகாரிகள் முப்பது இடங்களில் வசனங்களை வெட்டிவிட்டார்கள். உதாரணம் 'ஈழம் வெல்லும்; அதைக் காலம் சொல்லும்' என்ற வசனம். ரிலீஸுக்கு முன் உரிய விளம்பரம் கிடையாது. இருபத்திரண்டு தியேட்டர்களில் தமிழகம் முழுக்க ரிலீஸாகி, ஒரே வாரத்தில் எடுத்துவிட்டார்கள். இப்போது இரண்டாவது ரவுண்டாக பல தியேட்டர்களில் ஓடிக் கொண்டிருக்கிறது.''

**அடுத்து 'கலகம்' செய்யத் துவங்கி விட்டீர்கள் போலிருக்கிறதே...**

''அனுபவமிக்க களஞ்சியம் அவர்களின் இயக்கத்தில் 'கலகம்' படம் உருவாகிறது.

இதில் மண்ணுரிமைக்கான போராட்டம் தான் மையக் கரு. 'அன்புத் தோழி' போல அல்லாமல் படம் நெடுகிலும் வருவேன். படத்தில் தாடியோடு நடிக்கப் போகிறேன். முதல் பதினைந்து நிமிடத்துக்குப் பிறகு தாடி இல்லாமல் வருவேன்.''

**உங்களது நேரத்தை சினிமா எடுத்துக் கொள்கிறதா?**

''கிடையவே கிடையாது. எனது கருத்துக்களைச் சொல்ல திரைப்படங் களைக் கருவியாகப் பயன்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். எந்தக் கட்டத்திலும் என் அரசியல் பணிக்குக் குறுக்கீடாக நடிப்பு இருக்காது.''

**எல்லா கட்சிகளும் டைட்டானியம் விஷயத்தில் காவடி தூக்கியபோது உங்கள் இயக்கம் மௌனம் காத்ததே?**

''நேரே போய் மக்களைச் சந்தித்தோம். முதல்வரைப் பார்த்து அறிக்கை கொடுக்க வேண்டும். தொழிற்சாலை வரும் விஷயத்தில் மக்கள் கருத்து, பல்வேறு காரணங்களால் பிளவுபட்டுக் கிடக்கிறது. அரசு நிலத்தில் ஆலை வரட்டும். நிலங்களை அரசு கையகப்படுத்திக் கொடுக்க வேண்டாம். நில உரிமையாளர்கள் தங்கள் நிலங்களில் மணல் எடுக்கும் உரிமையை மட்டும் ஆலைக்குக் கொடுத்து பணம் பெற்றுக்கொள்ளலாம். நில உரிமை தொடர்ந்து அவர்களிடமே இருக்கும்.''

**ராமதாஸ் பல்வேறு பிரச்னைகளை கையிலெடுத்து அரசுக்குச் சங்கடங்களை உண்டாக்குவதாக நினைக்கிறீர்களா?**

''எல்லா கட்சிகளும் மக்கள் பிரச்னைகளை எடுத்துப் போராடி

# அன்புத்தோழி!





**''ராமதாஸ் மக்கள் பிரச்னைகளை எடுத்து வைப்பதில் எந்தத் தவறும் இல்லை!''**

அரசின் கவனத்தை ஈர்க்கின்றன. மருத்துவர் ராமதாஸும் பிரச்னைகளை எடுத்து வைக்கிறார். அதில் எந்தத் தவறும் இல்லை. ஆனால், கூட்டணிக் கட்சிகளின் கருத்துக்களை மட்டுமல்லாமல், எதிர்கட்சியினரின் கருத்துக்கும் மதிப்பளிக்கும் தாயுள்ளம் கொண்ட கலைஞர் முதல்வராக இருக்கிறார் என்பதையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.''

**கூட்டணிக் கட்சிகளின் ஒருங்கிணைப்புக் குழு அமைத்துச் செயல்பட்டால் கருத்து மோதல்களைத் தவிர்க்**

கலாமே?

"தி.மு.க. அரசுக்குப் பெரும்பான்மை மிகச் சிறிய அளவில் குறைந்திருக்கிறது என்பதைச் சொல்லும் அதே நேரத்தில், தி.மு.க. என்ற வலுவான இயக்கத்தின் பின்னணியில் அரசு அமைந்திருக்கிறது என்பதையும் சொல்ல வேண்டும். எந்தப் பிரச்னை என்றாலும் கருத்துப் பரிமாற்றத்துக்குத் தயாராக இருக்கிறார் கலைஞர். ஒருங்கிணைப்புக் குழு குழப்பத்தையே உண்டாக்கும்."

**எதற்கும் ஓர் எல்லை உண்டு என்று மருத்துவர் ராமதாஸை கலைஞர் எச்சரித்திருக்கிறாரே!**

"மணல் கொள்ளை உட்பட சில பிரச்னைகளை எடுத்துவைக்கும்போது அரசு தரப்பு உரிய விளக்கங்களைத் தருகிறது. சில சமயங்களில் அந்தத் துறை அமைச்சர்களின் பதில்கள் மோதல் சூழலை உருவாக்கும் வகையில் அமைந்து விடுகின்றன. மீடியா பரபரப்பைக் கூட்டுகிறது. மற்றபடி கலைஞரின் எச்சரிக்கை ஒரு குடும்பத்துக்குள் நடந்த செல்லமான கண்டிப்புதான்."

**கேபிள் தொலைக்காட்சி விவகாரத்தை அரசு எடுத்துக்கொள்வது சரியான அணுகுமுறைதானா?**

"மக்களின் அன்றாட வாழ்க்கையோடு தொடர்புடைய இந்த ஊடகத்தை அரசு எடுத்துக்கொள்வது சரிதான். ஆனால், ஊழல் நடைபெறாமல் பார்த்துக்கொள்ளும் வகையில் சட்டத்தை அமைக்க வேண்டும்."

**கேபிள் விவகாரத்தில் அரசு செயல்பாட்டுக்குக் காரணம் கலைஞர் குடும்பத்துக்குள் நடந்த மோதல்தானே...?**

"இந்தக் காலகட்டம் நம்மை அப்படி எண்ண வைக்கிறது. ஆனால் நான் அப்படிக் கருதவில்லை."

**உங்கள் கட்சியின் சமீபத்திய கடலூர் மாநாட்டினைத் தொடர்ந்து நடந்து வன்முறைச் சம்பவங்களில், காவல் துறை பாரபட்சமாக நடந்துகொண்டதாக அறிக்கை விட்டது ஏன்?**

"மிக புத்திசாலித்தனமாகச் சமாளிக்க வேண்டி ஒரு சிறிய சம்பவத்தை, காவல் துறை, பா.ம.க. விடுதலைச் சிறுத்தைகள் மோதலாக திசை திருப்பிவிட்டு எங்கள் தோழர்களையும் கைது செய்திருக்கிறது. இத்தனைக்கும் மாநாட்டில் பா.ம.க. தலைவர் கோ.க.மணியும் கலந்து கொண்டார்."

**சரி, கல்யாணம் என்னவாயிற்று? கலைஞர்கூட பெண் பார்ப்பதாகத் தகவல் வந்ததே!**

"சமீபத்தில் ஜீவா விழாவுக்குச் சென்றபோது, கலைஞர் என்னைப் பார்த்து 'தாடியோடு வர்றீங்க... ஜோடி எங்கே?" என்று கிண்டல் செய்தார். என் மேல் அக்கறை கொண்டவர்களின் முயற்சி தொடர்கிறது!"

– கௌசி

படம்: ஸ்ரீஹரி

"அதிர்ச்சியான செய்தி சொன்னால் விக்கல் நின்று விடுமே என்றுதான் சொன்னேன்..."

"அதற்காக மன்னர் போரில் வென்றார் என்றா சொல்வது? பாரும்... ராணி மாரடைப்பால் மயங்கி விழுந்துவிட்டார்."

– சென்னிமலை சி.பி.செந்தில்குமார்



வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

ஆங்கில நாவல்களுக்கு இணையாக

# THRILLERS IN தமிழ்

1930-களில்
தமிழகத்தை கலக்கி
தமிழ் வாசகர்களை அசர வைத்த

வடுவூர் **கே.துரைசாமி ஐயங்கார்**, பி.ஏ.,
எழுதிய நாவல்கள் – புதுப்பொலிவுடன்

ஆங்கிலத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ்
நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு
தமிழகத்தில் அன்றும் இன்றும் என்றும்

## திகம்பர சாமியார்

என்று போற்றப்படக் கூடிய **தரமான, த்ரில்லர்கள்**
விறுவிறுப்பான **துப்பறியும்** கதைகள்
கையில் எடுத்தால் கீழே வைக்க முடியாத அளவிற்கு கட்டிப் போடும்.
உவகையூட்டும் நாவல்கள் வெளிவந்து விட்டன.
வரம்பு மீறல்கள், நயவஞ்சகம் சூழ்ச்சி ஆகியவற்றை பிரமிப்பூட்டும் வகையில்
முறியடிக்கும் திகம்பர சாமியார் மற்றும் பிற கதாபாத்திரங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூர்ணா சந்திரோதயம் | (5 பாகங்கள்) | ..... | ரூ. 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் | (2 பாகங்கள்) | ..... | ரூ. 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 385.00 |
| 4. | மேனகா | (2 பாகங்கள்) | ..... | ரூ. 250.00 |
| 5. | மதன கல்யாணி | (3 பாகங்கள்) | ..... | ரூ. 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் | (4 பாகங்கள்) | ..... | ரூ. 460.00 |
| 7. | பாலாமணி (அ) பக்காத் திருடன் | (2 பாகங்கள்) | | ரூ. 170.00 |
| 8. | வசந்த மல்லிகா | | ..... | ரூ. 110.00 |
| 9. | வித்யாசாகரம் | | ..... | ரூ. 100.00 |
| 10. | பன்னியூர் படாடோப சர்மா | | ..... | ரூ. 150.00 |
| 11. | திவான் லொடபடசிங் பகதூர் | | ..... | ரூ. 40.00 |
| 12. | திரிபுரசுந்தரி (அ) திகம்பரசாமியார் திரும்பிரவேசம் | | | ரூ. 130.00 |
| 13. | வஸந்த கோகிலம் | | ..... | ரூ. 90.00 |
| 14. | தங்கம்மாள் (அ) தீர புருஷனின் தியாக கம்பீரம் | | | ரூ. 75.00 |







அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 600 004, தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at : Srinivasanalliancebook.com

Venkatesh

★ த.சத்தியநாராயணன், அயன்புரம்

**அசட்டுத்தனம், முட்டாள்தனம், கோமாளித்தனம் - விளக்கம் தருக?**

விடலைப் பருவத்தில் ஜொள்ளு விடுதல், மன்னிக்கக்கூடிய 'அசட்டுத்தனம்...' விடக்கூடாத நடு வயதில் ஜொள்ளுவிட்டு மாட்டிக் கொள்ளுதல் 'முட்டாள்தனம்...' எல்லாவற்றையும் விடவேண்டிய வயோதிகத்தில் ஜொள்ளுவிட முயல்வது 'கோமாளித்தனம்...'

★ அ.ராஜா ரஹ்மான், கம்பம்

**உங்களுக்கு எந்த வயது பெண்களைக் கண்டால் பிடிக்கும்...?**

தமது உண்மையான வயதை ஒளிக்காமல் தைரியமாகக் கூறும் எந்த வயதுப் பெண்களையும் பிடிக்கும்...

★ வே.ந.கதிர்வேல், வேலூர்

**டிராமா ஸ்டேஜ்... கோமா ஸ்டேஜ்... என்ன வித்தியாசம்?**

நடிகராக இருந்தால் 'I see you' in டிராமா ஸ்டேஜ்... நோயாளியாக இருந்தால் 'I.C.U' in கோமா ஸ்டேஜ்.

★ ஆர்.அஜிதா, கம்பம்

**வறுமையும் இல்லாமையும் ஒன்று தானே...?**

மனைவி சுசீலை வற்புறுத்தியும் கண்ணனிடம் கையேந்தாமல் இருந்த குசேலனின் கௌரவம், குசேலனின் வளமான வறுமை... கர்ணனிடமிருந்து கவச குண்டலங்களைத் திருட்டுத்தனமாக அபகரிக்க இந்திரன் ill - Feelingகுடன் ஆமைபோல் நுழைந்தது இல்லாமை.

★ அ.முரளீதரன், மதுரை

**புதுக் கவிதையின் முன்னோடி என்று யாரைக் கருதுகிறீர்கள்...?**

புதுக் கவிதைக்கு தலைக் காவேரி, பாரதியாரின் வசன கவிதைகள்... அது கொள்ளிடமாகப் பிரவாகமெடுத்து ந.பிச்சமூர்த்தி, கவிக்கோ அப்துல் ரகுமான், மீரா, கவிப்பேரரசு வைரமுத்து, நா.காமராசன், மு.மேத்தா என்று பல பெயர்களில் காவிரியாக ஓடிக்கொண்டிருக்கிறது.

★ என்.எஸ்.மணிமாறன், திருவண்ணாமலை

**பெண்ணாகப் பிறப்பது வரமா...? சாபமா...?**

பலரது வாழ்க்கையில் 'வரனாக' வந்து, 'சாப-விமோசனமாக' விளங்குபவள் பெண்.

★ என்.குப்புசாமி, கோவை

**கல்கியில் தாங்கள் விரும்பிப் படிக்கும் பகுதி எது?**

ஸ்ரீரங்கத்து தேவதையின் வாரம் ஒரு



# பெண்...



பாகரம், சுஜாதாவின் திவ்ய பிரபந்த விளக்கம், வாரா வாரம் தேவாரமாகத் தித்திக் கிறது.

★ **ஸ்வாதி, பெங்களூரு**

**பெண் புத்தி பின் புத்தி என்கிறார்களே...?**

செய்த தவறைக் குத்திக் காட்டும் PIN புத்தி என்று பாராட்டாக எடுத்துக்கொள்ளுங்கள்...

★ **பி.சிவா, பாளையங்கோட்டை**

**பத்தினி சாபம் பலிக்குமா...?**

தெரியாது... ஆனால் பட்டினி சாபம் பலிக்கும்.... பசி வந்தால் பத்தினியும் மறந்து போகும்!

★ **சாருமதி, சென்னை**

**நீங்கள் மிகவும் ரசித்த பதில்...?**

எனது நாடகக் குழுவைச் சேர்ந்த நண்பன் பார்த்திபன், எழுத்தாளர் ஜெய காந்தனுக்கு மிகவும் நெருக்கமானவர். அந்த பார்த்திபன் என்னிடம் சொன்னது... முட்டையைப் பற்றிப் பேச்சு வந்தபோது 'உள்ளேயிருந்து உடைய ஜனனம்... வெளியேயிருந்து உடைய மரணம்' என்று அற்புதமான பதிலை அளித்தாராம் அந்த அக்னிக் குஞ்சு.

★ **அலர்மேல்வல்லி, திருத்தணி**

**கான்சர் நோயைக் குணப்படுத்த முடியுமா?**

குணமா...? கான்சரை விரட்டி அடிக்கும் வைத்தியரை நான் பார்த்திருக் கிறேன்... விஜயா ஹெல்த் சென்டரில் உள்ள 'பேட்டர்சன் கான்சர் சென்டரை'ச் சேர்ந்த டாக்டர் விஜயராகவனிடம் Cancerரை குணப்படுத்த முடியுமா?' என்று நான் கேட்டபோது, 'I can sir' என்று உற்சாகமாக, அதே சமயத்தில் உறுதியாகக் கூறி னார். புற்றுநோயோடு இவரி டம் செல்பவர்கள் பூரண குணமாகிக் கடவுள் பற்று நோயோடு திரும்பி வருகிறார்கள்.

★ **எஸ்.சங்கர், திருப்பரங்குன்றம்**

**? ஆதாம் - ஏவாள் கதையில் ஆப் பிளுக்கு பதில் பலாப்பழம் இருந்திருந் தால்...?**

ஆதாம் - ஏவாளுக்கிடையே ஈர்ப்பை உண்டாக்கியது ஆப்பிள். அதனால் உண்டா னது மனித குலம். நீங்கள் கேட்டபடி ஆப் பிளுக்குப் பதிலாக பலாப்பழம் இருந் திருந்தாலும், அதைச் சாப்பிட்டு விடலாம். பலாப்பழத்தை நறுக்க வேண்டும். நறுக்கக் கத்தி வேண்டும். ஆதாம் -ஏவாள் காலத் தில் பலாப்பழம் வெட்டும் கத்தி கண்டு பிடிக்கப்படவில்லை. அதனால் அதைச் சாப்பிட்டிருக்க முடியாது. சந்ததியும் வளர்ந் திருக்காது. கேள்வி கேட்க நீங்களும் கிடை யாது. பதில் சொல்ல நானும் கிடையாது. பாவம்... அழுகிய பலாப்பழத்தை உற்றுப் பார்த்தபடி என்ன செய்வதென்றே தெரியா மல் ஆதாமும் ஏவாளும் இன்றுவரை அதே மரத்தடியில் அமர்ந்த வண்ணம் இருந்திருப்பார்கள்.... அதனால் ஆப்பிள் தான் இதற்கேற்ற 'பலான' பழம்.

★ **என்.கோமதி, நெல்லை**

**வாசகர்களுக்கு இரண்டே எழுத்தில் மெசேஜ் சொல்லுங்களேன்...?**

'OK'

# வரமா...சாபமா?



# கல்கி



2007 செப்டெம்பர் 9
சர்வஜித் ஆவணி 23
மலர் : 66
இதழ் : 6

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா
- பாரதியார்

## இஸ்லாமியர்களே! இணைந்து குரல் கொடுங்கள்!

ஹைதராபாத்தில் நடந்த அதிகோர குண்டு வெடிப்பைத் தவிர்த்திருக்க முடியும் - மத்திய உளவுத்துறை அளித்த ரகசிய எச்சரிக்கை அறிக்கை மீது ஆந்திர அரசு உரிய நடவடிக்கை எடுத்திருந்தால்!

எச்சரிக்கை செய்யப்பட்டும் கடமையில் தவறிய ஆந்திர அரசின் தயக்கமும் அலட்சியமும் கடுமையான கண்டனத்துக்கு உரியவை.

இஸ்லாமியர் வீடுகளில் தேடுதல் வேட்டை நடத்தினால் அதன் மூலம் மதவாதப் பிரச்னையைக் கிளப்ப நேருமே என்று ஆந்திர அரசு தயங்கியதாகச் செய்திகள் வருகின்றன!

தங்க ஊசி என்பதற்காக அதைக்கொண்டு கண்ணைக் குத்திக் கொண்ட கதைதான் இது!

இந்தியாவில் இஸ்லாமியர்களைச் சிறுபான்மை இனத்தினர் என்று பாகுபடுத்தி ஏராளமான சலுகைகள் வழங்கி வருகிறோம். ஆனால், இந்த தேசத்துக்குச் சமீப காலங்களில் ஏற்பட்ட மிகக் கொடூரமான சேதங்கள், இஸ்லாமிய பயங்கரவாத அமைப்புகளால் விளைந்தவையே! 'ஜிஹாதி' என்ற பெயரில், திட்டமிட்ட கொலை வெறியாட்டம் நிகழ்த்தி வருகின்றன இவ்வமைப்புகள்! கடந்த ஆறு மாதங்களாக பாகிஸ்தான் ஜிஹாதி பத்திரிகைகளில், 'ஹிந்துக்களைப் பூண்டோடு அழிக்க வேண்டும்' என்று பகிரங்க பிரசாரம் நடந்து வந்திருக்கிறது. இந்தியாவை முஸ்லிம் தேசமாக்க வேண்டும் என்றும் எழுதப்பட்டிருக்கிறது! இச் செய்திகளை ஆதார பூர்வமாக இந்தியப் பத்திரிகைகள் வெளியிட்டிருக்கின்றன.




இந்தியாவில் வாழும் இஸ்லாமியர்கள், இந்த எழுத்துக்கள் பற்றி அறியாதிருக்கக்கூடும். ஆனால், இங்கு நடக்கும் குண்டு வெடிப்பு கோரங்களைக்கூட இங்குள்ள இஸ்லாமிய அமைப்புகள் கண்டனம் செய்யவில்லை; தங்கள் மதத்தைச் சேர்ந்த சகோதரர்கள் இந்தப் பாதகத்தை நிறுத்த வேண்டும் என்று தார்மிகக் கோரிக்கை விடுக்கவும் முன்வரவில்லை.

நமது அரசியல்வாதிகளும் (பா.ஜ.க. நீங்கலாக) இஸ்லாமிய பயங்கரவாதிகளின் கொலை வெறியை நேரடியாகக் கண்டனம் செய்யத் தயங்கி, பாகிஸ்தானின் ஐ.எஸ்.ஐ. மீது பழி சுமத்துவதுடன் நிறுத்திக்கொள்கிறார்கள்! இந்தப் பிரச்னையை இவ்வாறு கண்டும் காணாமல் இருப்பதன் மூலம் இஸ்லாமிய பயங்கரவாதம் மேலும் வளரும். இன்னொரு பக்கத்தில், இந்தியாவில் முஸ்லிம்களுக்கு எதிரான உணர்வுகள் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பிக்கும். அவ்வாறு உணர்வுகள் பெருக்கெடுக்கிற கட்டத்தில் ஹிந்துத்வா சித்தாந்தத் துக்கே ஆதரவு பெருகும் (ஏற்கெனவே இந்தப் போக்கு ஆரம்பித்துவிட்டது); காங்கிரஸ் அடுத்த தேர்தலில் ஆட்சிக்கு வருவது துர்லபம் ஆகும்.

இந்தியா இன்று மதச்சார்பற்ற நாடாகத் திகழ்கிறது; நாளை பா.ஜ.க. மற்றும் அதன் ஆதிக்க அமைப்புகள் அதிகாரத்தைக் கைப்பற்றினால் ஹிந்துத்வா கோட்பாடுகள் வலுப் பெறும். எத்தனை ஜிஹாதி அக்கிரமங்கள் நடந்தாலும் இந்தியா முஸ்லிம் நாடாக மாறவே முடியாது. ஆனால், முஸ்லிம் பயங்கரவாதிகளுடைய நடவடிக்கைகளின் எதிர்விளைவாக அது ஹிந்து நாடாக மாறுவது வெகு எளிது. அப்போது இங்கே இருக்கக்கூடிய இஸ்லாமிய சகோதரர்களின் பாதுகாப்புக்கும் இப்போது அவர்கள் அனுபவிக்கும் உரிமைகளுக்கும் கடுமையான சவால்கள் ஏற்படும்.

தார்மிக உணர்வுத் தூண்டலால் இல்லாவிட்டாலும் இந்தத் தொலைநோக்கின் அடிப் படையிலாவது இந்திய முஸ்லிம் சகோதரர்கள் விழிப்புகொள்ள வேண்டும். தங்கள் மதத்தின் பெயரால் இங்கே இழைக்கப்படும் கொடுமைகளை நிறுத்தும்படி அழுத்தம்திருத்தமாகக் குரல் கொடுக்க வேண்டும். ''எங்கள் தேசத்தைச் சிதைத்து, எங்கள் வாழ்க்கையைக் கேள்விக் குறி ஆக்காதீர்கள்!'' என்று இஸ்லாமிய பயங்கரவாதிகளுக்கு அவர்கள் விடுக்கும் எச்சரிக்கை மட்டுமே பயன்தர வல்லது. ●

# தொல்லைபேசி

**த**லைப்பே மொத்த கதையையும் சொல்லிடும். தொலைபேசி, தொல்லைபேசியாகி ஒருத்தன் வாழ்க்கையை எப்படிச் சீரழிக்குதுங்கறதைக் கொஞ்சம் புதுசு, கொஞ்சம் பழசு கலந்து சொல்லியிருக்காங்க.

ஹீரோ விக்ரமாதித்யாவுக்கு ப்ளேபாய் கேரக்டர். கனகச்சிதமா பொருந்திப் போறார். மனைவியை ஏமாத்தி அவர் பண்ற கூத்துகள் ரசிகர்கள் மனசுல வெறுப்பை வளர்க்கும் அமிலப் பட்டாசுகள். காதல் காட்சிகள்ல இன்னும் அனுபவம் வேணும். ஆனா, அப்பாவை இழந்துட்டுக் கலங்கும்போது எல்லார் மனசையும் பாரமாக்கிடுறார்.

குடும்பத் தலைவியா வர்ற பிரியங்கா, ரசிகர்களின் குறிப்பா பெண் ரசிகைகளின் ஒட்டுமொத்த அப்ளாஸையும் அள்ளிடறாங்க. பெரிய கண்களை விரிச்சு அவங்க கணவன்கிட்ட சண்டை போடும்போது நிஜ குடும்பத்தையே பார்க்கற ஃபீலிங். புதுமுக நடிகைகளா ஆர்த்தி, திவ்யா களமிறங்கியிருக்காங்க.

ரொம்ப வேலை எதுவும் இல்லை.

கருணாஸ் காமெடி, படம் தொய்வடையாம காப்பாத்துது. சிரிப்போடு சேர்ந்து சிந்திக்கவும் வச்சிருக்கார். நிழல்கள் ரவி பாசமான தந்தையா வந்து மகனுக்காகவே வாழ்க்கைய தியாகம் பண்ணும்போது உயர்ந்து நிக்கறார்.

சாந்தகுமாரோட இசை இறுக்கத்தைத் தளர்த்தி நம்மை படத்தோடு ஒன்ற வைக்குது. 'உன் மனதை' பாடல் அழகான கவிதை. சங்கரின் ஒளிப்பதிவில் இளமை பொங்குது. வசனங்கள் இன்னும் ஷார்ப்பா இருந்திருக்கலாம். டைரக்ஷன் கே.பன்னீர்செல்வம். என்னதான் கதாபாத்திரங்களை வச்சு திரைக்கதைய சுவாரஸ்யமா நகர்த்த முற்பட்டாலும் அப்பப்போ ஆடியன்ஸ் சலிப்படையறதைத் தவிர்க்க முடியல. கதை வெய்ட்டா இல்லாததால கனமான பாத்திரங்கள் இருந்தும் படம் தடுமாறுது. க்ளைமேக்ஸை யூகிக்க முடியுது. அழுத்தமான காட்சிகள் குறைவா இருக்கறது படத்துக்குப் பலவீனம்.

– ப்ரியா

மருதன்

# நான் இன்னும்

கருத்த உருவம். பருமன். பெண். தவிரவும் அவர் அணிந்திருந்த உடைகள் அந்த ஹோட்டல் பணியாளர்களைச் சிறிதும் கவரவில்லை. காக்கிரி பீக்கிரி என்று கண்ட கண்ட வர்ணங்கள். தலையில் ஒரு துணி டோப்பா. கழுத்து முழுக்க மாலைகள். சிறிதும் பெரிதுமாக குண்டுமணிகள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு வண்ணத்தில்.

முகத்தைச் சுளித்தபடி தலையைத் தாழ்த்திப் பார்த்தார் அந்தப் பணியாளர். என்ன பெண் இவர்? கொஞ்சம்கூட ரசனையே இல்லாமல்? மஞ்சள், பக்கத்திலேயே பளீர் பச்சை. ஒட்டினாற் போல் கிளிப்பச்சை கட்டங்கள். பிறகு, ஊதா. கடவுளே! என்ன உடை இது!

'ஒரு நிமிடம்'

அந்தப் பெண் நிமிர்ந்து பார்த்தார். 'என்னையா சொல்கிறீர்கள்?' என்பதாக ஒரு பார்வை.

'இங்கேயெல்லாம் வரக்கூடாது. நகர்ந்து போ!' சுருக்கென்றது அவருக்கு. உள்ளுக்குள் கோபம். அடக்கிக் கொண்டு கண்ணாடிக் கதவைத் திறந்து முன்னேறினார். 'நில் நில்' என்று கத்திக் கொண்டிருந்த அந்தச் சீருடைப் பணியாளரை உதாசீனம் செய்தபடி வேக வேகமாக நகர்ந்து சென்றார்.

எங்கிருந்துதான் திடீரென்று வந்தார்களோ! இரண்டு, மூன்று பேர், நான்காகக்கூட இருக்கலாம். பாய்ந்து வந்தார்கள். ஒரே குரலில் சத்தமாக அறிவித்தார்கள். 'ஒழுங்கு மரியாதையாக வெளியே போ!'

அதிர்ச்சி. ஆத்திரம். ஏமாற்றம். என்ன நடக்கிறது எனக்கு? எந்த நூற்றாண்டில் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் நான்? என்ன செய்வது? சண்டை போடலாமா? சட்டம் பேசலாமா அல்லது ச்சீ போ என்று வெளியேறி விடலாமா? எது உகந்தது?

கதவை நோக்கித் திரும்ப அவர் யத்தனிப்பதற்குள் உள்ளிருந்து க்றீச் குரல்கள்.

'ஆ, ரிகோபெர்டோ மெஞ்சு!'

அந்தப் பெயரைக் கேட்டதுதான் தாமதம். பணியாளர்கள் அப்படியே உறைந்துபோய் நின்றுவிட்டார்கள். ஓடிச்சென்று இளிக்கவும் செய்தனர். 'ஐயோ, நீங்கள்தான் ரிகோபெர்டோ மெஞ்சுவா? அருள்கூர்ந்து மன்னிக்கவும். வேறு யாரோ என்று நினைத்துவிட்டோம்.' 'வேறு யாரோ என்றால்?' திருப்பிக் கேட்டார் மெஞ்சு. அவர்கள் தலையைத் தாழ்த்தியபடி பதிலளித்தார்கள்.

'இல்லை. இது போன்ற பெரிய ஹோட்டல்களில் பல பிச்சைக்காரர்கள் திடீர் திடீரென்று நுழைந்து விடுகிறார்கள்'

அது ஹோட்டல் கோரல் பீச். மத்திய அமெரிக்காவில் உள்ள கன்குன் (Cancun) என்னும் பகுதியில் அமைந்துள்ள அழகு கொஞ்சும் பிரதேசம்.

அவர், ரிகோபெர்டோ மெஞ்சு. 1992-ம் ஆண்டுக்கான நோபல் அமைதிப் பரிசைப் பெற்றவர். கவுதிமாலா நாட்டைச் சேர்ந்தவர். குய்சி - மாயா என்னும் இனத்தைச் சேர்ந்தவர். கவுதிமாலாவில் நடைபெற்ற மனித உரிமை மீறல்கள் குறித்து அழுத்தம்திருத்தமாகப் பதிவு செய்தவர்.

அவர் அன்று அணிந்து வந்திருந்தது அவர் சார்ந்துள்ள இன மக்கள் அணியும் அலங்கார உடை.

* ரிகோபெர்டோ மெஞ்சு

இன்னொன்று தெரியுமா? மத்திய அமெரிக்கப் பகுதிகளில் உள்ள ஹோட்டல்கள், மாயா பழங்குடிகளின் ஆடைகளையும் அவர்கள் உருவாக்கித் தரும் விசேஷ கைவினைப் பொருள்களையும் காட்டித்தான் அயல்நாட்டுப் பயணிகளைக் கவர்ந்திழுக்கின்றன. ஆனால், பழங்குடிகள் மட்டும் வேண்டாம், உள்ளே வரக்கூடாது!

மெஞ்சு இந்த ஹோட்டலுக்கு வந்தது காலை நீட்டி அமர்ந்து ஆரஞ்சு சாறு பருகுவதற்கு அல்ல. மெக்ஸிகோ வானொலி நிலையம் ஒன்று அவரை அன்று பேட்டி காண இருந்தது. அந்தப் பேட்டியில் மனித உரிமை மீறல்கள் பற்றி அவர் விரிவாகப் பேசுவதாக இருந்தது. வேடிக்கைதான்.

இன்னார் என்று அவர் அறிவிக்காமல் இருந்திருந்தால் தூக்கி வெளியே கடாசியிருப்பார்கள். காந்திக்கு இது நேர்ந்திருக்கிறது. தென்னாப்பிரிக்காவில் முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து உந்தித் தள்ளப்பட்டிருக்கிறார் அவர். நெல்சன் மண்டேலாவுக்கும் இது நேர்ந்திருக்கிறது. நீதிமன்றத்தில் பழங்குடிகள்

# இருக்கிறேன்!




உடை அணிந்து வந்ததற்காக அவர் குத்தலுக்கும் கேலிக்கும் ஆளாகியிருக்கிறார்.

ஏன்? இனவெறுப்பு. 'எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை. அவர்கள் நிறம் பிடிக்கவில்லை. அவர்கள் கலாசாரம், உணவு, சங்கீதம், நடனங்கள் எதுவும் பிடிக்கவில்லை. அவர்கள் வழிபடும் தெய்வங்கள் பிடிக்கவில்லை. அவர்கள் உடுத்தும் ஆடைகள் பிடிக்கவில்லை. அவர்கள் மொழி பிடிக்கவில்லை.'

'ஐயா, நான் இன்னமும் மறைந்துவிடவில்லை' என்று அவ்வப்போது தனது இருப்பை அறிவித்துக்கொண்டே இருக்கிறது இனவெறுப்பு. ○

# நடக்குமென்பார்;

**மேஷம்:** வெளியூரிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். கல்வி வளம் சிறப்படையும். நண்பர் / உறவினரை விட்டு விலகிச் செல்வீர்கள். வழக்கு வெற்றி அளிக்கும். பூர்வீகச் சொத்துகள் மூலம் நற்பலன் அடைவீர்கள். மன சஞ்சலம் தீரும். திருமணம் கைகூடும். குரு/ சனி/ ராகு/ கேது வழிபட்டு வர நன்மை கிட்டும்.

**ரிஷபம்:** இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வேலையில் பதவி உயர்வு, இடமாற்றம் உண்டாகும். குழந்தைகள் வழியில் சுபச் செலவுகள் ஏற்படும். தொழிலில் ஏற்றம் ஏற்படும். மன அமைதி ஏற்படும். சனி / ராகு/ கேது வழிபட்டு வர நன்மை பயக்கும்.

**மிதுனம்:** பிடிவாத குணம் மாறி எந்த ஒரு நபருடனும் ஒத்துப் போகும் தாரம். மனதில் தைரியம், தன்னம்பிக்கை ஏற்படும். தெய்வ அனுகூலத்தால் நல்லது நடக்கும். வாக்கு, நாணயம் காப்பாற்றப்படும். வியாபாரத்தில் முன்னேற்றமான சூழ்நிலை ஏற்படும். நீண்டகாலக் கடன் தொல்லை நீங்கும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கடகம்:** உடல் நிலையில் போதிய கவனம் தேவை. வாகனத்தில் செல்லும் போது உஷார். படிப்பில் கவனம் செலுத்தவும். குழந்தைகள் வழியில் சுபச் செலவுகள் கைகூடும். இல்லற வாழ்வில் கணவன்-மனைவி விட்டுக்கொடுத்து நடந்து கொள்வது நல்லது. ராகு / கேது/ சனி பகவானுக்கு விளக்கு ஏற்றி வழிபட்டு வந்தால் நன்மை கிட்டும்.

**சிம்மம்:** எதிலும் அதிக பரபரப்புடன் செயல்பட்டு வெற்றிகளை அள்ளிக் குவிப்பீர்கள். மனதுக்கு இனிய சம்பவங்கள் நடக்கும். மனக் குழப்பம் இருந்தாலும் கடைசியில் சாதகமான பலனை அளிக்கும். வழக்கு விஷயத்தில் நல்ல வெற்றி ஏற்படும். எதிரிகளை வெல்லும் திறமை ஏற்படும். திருமணம் கைகூடும். ராகு / கேது / குரு / சனி பகவானுக்கு விளக்கு ஏற்றி வர நற்பலன் அதிகரிக்கும்.

**கன்னி:** மனச்சலனம் விலகி நற்பலன் கிட்டும். பெற்றோரை விட்டு விலகி வெளிநாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வராத நிலுவைகள் வந்து சேரும். கடன் சுமை தீரும். தந்தையின் உடல்நிலை பாதிக்கும்.



# நடக்கும்!

**2.9.07 முதல் 8.9.07 வரை**

சனி / குரு பகவானுக்கு விளக்கு ஏற்றி பிரதட்சணம் செய்துவர நல்ல பலன் அளிக்கும்.

**துலாம்:** மனதுக்கு நிறைவான சம்பவங்கள் நடக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். ராகு / கேது பகவானுக்கு விளக்கு ஏற்றி வழிபட்டு வந்தால் நற்பலன் அதிகரிக்கும்.

**விருச்சிகம்:** அந்நிய நாட்டு மனிதர்கள் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். ஏற்றுமதி-இறக்குமதி தொழில் செய்பவர்கள் லாபம் அடைவீர்கள். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். சிலர் புதிய வீட்டுக்குப் போக நேரிடும். வேலைப் பளு அதிகரிக்கும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு செய்துவர நற்பலன் அதிகரிக்கும்.

**தனுசு:** தூரதேசப் பிரயாணம் வந்து சேரும். தெய்வ அனுகூலத்தில் நற்பலன் கிட்டும். வியாபாரத்தில் நல்ல இலாபம் கிட்டும். தடை விலகித் திருமணம் நடக்கும். நண்பர்/உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். கல்வி வளம் சிறப்பு பெறும். வீடு / மனை வாங்க நல்ல தருணம். குரு வழிபாடு செய்துவர நற்பலன் அளிக்கும்.

**மகரம்:** நீண்ட நாள் பிரச்னை முடிவுக்கு வரும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். யாரிடமும் வாக்குவாதம் செய்யக் கூடாது. வாகனத்தில் செல்லும்போது கவனம். இல்லற வாழ்வில் விட்டுக்கொடுத்துப் போவது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். சிலருக்கு வீடு மாற்றம் உண்டு. கைப் பொருள் மீது கவனம் தேவை. ராகு / கேது/ சனி வழிபட்டு தீபம் ஏற்றிவர நற்பலனை அளிக்கும்.

**கும்பம்:** எந்தக் காரியத்திலும் கவனம் தேவை. குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. உத்தியோகத்தில் பதவி உயர்வு கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மனைவியின் உடல் நிலை சற்று பாதிக்கும். வராத பணம் வந்து சேரும். வழக்கு வெற்றி பெறும். ராகு / கேது / குரு / சனி பகவானுக்குத் தீபம் ஏற்றி வழிபாடு செய்துவர நன்மை கிட்டும்.

**மீனம்:** வெளிநாட்டு மனிதர்களால் நற்பலன் ஏற்படும். நினைத்த காரியத்தில் சாதிக்கும் யோகம் உண்டாகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். காசு, பணத்துக்குப் பிரச்னை இல்லை. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். தடைகள் இல்லாமல் எல்லா காரியங்களும் நடக்கும். வழக்கு வெற்றி பெறும். பரிகாரம் தேவையில்லை. ●

## பரத்வாஜ் பதில்கள்!

* என் பெண்ணுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

**- ஆர்.உப்பிலி, சென்னை - 73**

உங்கள் பெண்ணுக்கு 16.11.2007-க்குப் பிறகு, உடன் பிறப்பு இருவர் உள்ள இடத்தில் திருமணம் கைகூடும். சர்ப்பதோஷம் உள்ள வரனாகப் பார்க்கவும்.

* நானும் எனது கணவரும் சிம்ம ராசி. ஒரே வீட்டில், ஒரே ராசியில் இருக்கக் கூடாது என்கிறார்களே... இதற்குப் பரிகாரம் உண்டா?

**-மல்லிகா அன்பழகன், சென்னை -28**

இருவரும் ஒரே ராசியாக இருப்பதில் எந்தத் தவறும் கிடையாது. கிரஹ பெயர்ச்சி பிரகாரம் இருவருக்கும் பலன் ஒரே மாதிரி நடக்கும். அதனால் எந்தவித பாதிப்பும் கிடையாது. அவரவர் (ஜாதகம்) பிறந்த வேளைப்படிதான் பலன் அமையும். கவலைப்படத் தேவையில்லை.

**தஞ்சை பரத்வாஜ்**

காதல் பொன்மொழிக் கதை 6

# நீரின் ஓட்டத்தில் நகர்ந்து...

காதல் அடி மேல் அடி வைத்து ஒரு பூனை போல மெல்ல வருகிறது. போகும்போது ஒரு யானையாகக் கதவை பலமாக மிதித்துச் சாத்திவிட்டுச் செல்கிறது.

- ராபர்ட் லெம்ப்கே

கேரளா. ஆலப்புழை மாவட்டத்தின், காயல் கரையோர கிராமம். காயலின் கட்டுச் சுவரை மோதியபடி வெள்ளம் போன்று ஓடிக்கொண்டிருந்தது நீர். கரையின் இரு பக்கமுமிருந்த தென்னை மரம் ஒன்றில் சாய்ந்து நின்றுகொண்டிருந்தாள் நந்தினிக் குட்டி.

கடவுளால் மிகவும் நேசிக்கப்படும் வெகு சில பெண்களுக்கே, அப்படி ஓர் அழகான முகம் வாய்க்கும். ஆயிரமாயிரம் நட்சத்திரங்களை முகமெங்கும் வாரி இறைத்தாற் போன்ற பிரகாசமான முகம். நெற்றியில் சந்தனக் கீற்றிட்டு, மேலே சாந்துப்பொட்டு வைத்திருந்தாள்.

தூரத்தில் தெரிந்த படகில், தன் அப்பாவைப் பார்த்ததும் நந்தினி உற்சாகமானாள். படகு வந்து நின்றதும் இறங்கிய அப்பாவுடன், ஓர் இளைஞனும் இறங்கினான். தாடி வைத்திருந்தான். உலகத்துத் துயரங்கள் அத்தனையும் சேர்ந்து சுமப்பது போன்ற சோகமான உருவம். ''வாங்க...'' என்று அவனின் கையைப் பிடித்தபடி அப்பா அழைத்து வந்தார். யாராவது கம்யூனிஸ்ட் சகாவாக இருக்கும். அப்பா இந்தப் பகுதியில் கம்யூனிஸ்ட் கட்சியில் தீவிரமாக இயங்கி வருபவர்.

''இது என் பொண்ணு... நந்தினிக்குட்டி'' என்று அந்த இளைஞனிடம் அறிமுகப் படுத்தி வைத்தார்.

தனது இரு கரங்களையும் குவித்து வணக்கம் கூறிய இளைஞனை கவனித்தாள் நந்தினி. இந்தப் பக்கத்து முகமாகத் தெரிய வில்லை. தமிழ்நாட்டைச் சேர்ந்தவனாகத் தான் இருக்க வேண்டும். தாடியோடு இருந் தாலும் அழகாகவே இருந்தான். தாடியை எடுத்துவிட்டால் இன்னும் அழகாகத் தோன்றுவான்.

''வாங்க...'' என்று அழைத்துக்கொண்டு, கரையோரமாக இருந்த வீட்டை நோக்கி நடந்தனர். வீட்டினுள் நுழைந்தவுடன், அவனை முன்கட்டில் உட்கார வைத்துவிட்டு அப்பாவும் மகளும் உள்ளே சென்றனர்.

''ஆலப்புழைல பார்த்தேன். கடைத் தெருவுல மயக்கம் போட்டு விழுந்து கிடந் தான். தண்ணி தெளிச்சி எழுப்பிவிட்டு யாரு, என்னன்னு விசாரிச்சேன். தமிழ்நாட்டுல ருந்து வந்திருக்கான். வேலை வெட்டி இல்லையாம், வீட்ல கோபிச்சுக்கிட்டு வந்தேன்னான். ஏதாச்சும் வேலை வாங்கிக் குடுங்கன்னான். பாத்தா நல்ல பையன் மாதிரி தெரிஞ்சது. அதான்

ஏதாச்சும் வேலைல சேர்த்து விடலாம்னு அழைச்சிட்டு வந்தேன். நீ அவனுக்குச் சாப்பாடு போடு. நான் குளிச்சிட்டு வந்து டறேன்'' என்றபடி நகர்ந்தார்.

## ஜி.ஆர். சுரேந்தர்நாத்

இலையில் போட்டிருந்த சாதத்தை உண்ணாமல், சோற்றை அளைந்துகொண்டே உட்கார்ந்திருந்தான் அவன்.

''அய்யே... என்ன இது? சின்னக் குழந்தை மாதிரி சோத்துல விளையாண்டுகிட்டு? வெட்கப்படாம சாப்பிடுங்க'' என்று நந்தினி தமிழில் கூறியவுடன், அவன் ஆச்சர்யத்துடன் நந்தினியை நோக்கினான்.

''என்ன பாக்கறீங்க? எனக்குத் தமிழ் எழுத, படிக்கக்கூட தெரியும். நீங்க எந்த ஊரு?''

''கோயம்புத்தூர்.''

''பேரு என்னன்னு சொல்லவே இல்லையே.''

''மாதவன்.''

''சரி... சாப்பிடுங்க'' என்று அவள் கூறிக் கொண்டிருக்கும்போதே, குளித்துவிட்டு தலையைத் துவட்டியபடியே அறையினுள் நுழைந்த அப்பா, ''அவள்ட்ட பாத்துப் பேசணும். பெரிய எழுத்துக்காரியாக்கும்'' என்றார்.

''என்ன?'' என்று புரியாமல் விழித்தான்.

''கதையெல்லாம் எழுதுவா. கலாகௌமுதி, மலையாள மனோரமாவுல எல்லாம் அவ கதை வந்திருக்கு. நீங்க உங்க சோகக் கதையைச் சொன்னா, அதையும் எழுதிடுவா.''

''அய்யோ... என்னப்பா?'' என்று சிணுங்கினாள் நந்தினிக்குட்டி.

''தம்பிக்கு தோட்டத்து வீட்டை ஒழிச்சுக் கொடுத்துடு.''

''சரிப்பா'' என்றாள்.

மாலை. வீட்டுக்கு முன்புறமிருந்த முற்றத்தில் உட்கார்ந்தபடி காயலை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான் மாதவன். நன்கு இருட்டிக்கொண்டு வந்தது.

திடீரென்று, ''தீபம்... தீபம்...'' என்று குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

நந்தினி கையில் ஒரு சிறிய குத்துவிளக்



**சட்டென்று மாதவன் தோளில் சாய்ந்து கொண்டாள். அவனும் அவளை அணைத்துக் கொண்டான்.**



கோடு வந்து கொண்டிருந்தாள். முற்றத்தின் நடுவில் வைத்துவிட்டு, மாதவனுக்குச் சற்றுத் தள்ளி அமர்ந்து கொண்டாள்.

"வீட்டுல பெரிய சண்டையோ?" என்றாள்.

"ஆமாம்..." என்று இழுத்தான்.

"உங்களுக்கு விருப்பமில்லன்னா சொல்ல வேண்டாம். இல்ல கதையா எழுதிடுவேன்னு பயப்படாதீங்க."

"எத்தனை கதை எழுதியிருக்கீங்க?"

"எட்டுக் கதை"

"ம்... நான் தமிழ்ல நிறையப் படிப்பேன். நீங்க நிறைய எழுதி ஃபேமஸ் ஆயிடுங்க. எம்.டி.வாசுதேவன் நாயர் கதைகள் மாதிரி, தமிழ்ல மொழிபெயர்ப்பாகி வரட்டும். படிக்கிறேன்."

"எம்.டி. படிச்சிருக்கீங்களா?" என்றாள் உற்சாகத்துடன்.

"ம்... காலம், நாலுகட்டு, வாரணாசி, மஞ்சு..." என்று மாதவன் கூறிக்கொண்டே போக, "என்ட குருவாயூரப்பா... எங்க ஊர் பசங்ககூட எம்.டி.யைப் படிக்கறது குறைஞ்சு போச்சு. எனக்கு எம்.டி.ன்னா ரொம்பப் பிடிக்கும்" என்று அவள் கூறிக் கொண்டிருக்கும்போதே மழை பெய்ய ஆரம்பித்தது.

"என்ன திடீர்னு மழை பெய்யுது?"

"இங்க இப்படித்தான் திடீர் திடீர்னு மழை பெய்யும்."

"இந்த மாதிரி அழகான சூழல்ல இருந்தா, எல்லோருக்கும் கதை எழுத வரும்னு நினைக்கறேன்"

அடுத்து வந்த நாட்களில் நந்தினியும் மாதவனும் நெருங்கிப் பழக நிறைய சந்தர்ப்பங்கள். நந்தினியின் அப்பா பெரும்பாலான சமயங்களில் வீட்டில் இருப்பதில்லை.

கரையோரம், நீரினை நோக்கி நன்கு வளைந்து, சமமட்டமாகச் சென்ற தென்னை மரத்தின் மேல் அமர்ந்தபடி,

"தமிழ்லயும் எனக்குக் கதை எழுதணும்னு ஆசை."

"எழுதுங்க. ஜெயமோகன் மாதிரி பைலிங்குவல் ரைட்டராயிடலாம்."

"எழுதி அனுப்பறேன். திரும்பி வந்துடுது."

"நீங்க தாங்க. நான் படிக்கப் பாக்கறேன்."

கரையோரம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த படகில் இருவரும் அமர்ந்துகொண்டு, "ஏன் தாடி வச்சிருக்கீங்க? நீங்க தாடிய எடுத்துட்டீங்கன்னா நல்லா இருப்பீங்க" என்று கூறிய நந்தினி, குனிந்து காயல் நீரை அலச, நந்தினியின் தலையில் வைத்திருந்த முல்லைப்பூ நீரில் விழுந்தது. "அய்யடா..." என்று அதை எடுக்க முற்பட்டாள். அது நீரின் ஓட்டத்தில் நகர்ந்து சென்றுவிட, எதிர்ப்பக்கம் அமர்ந்திருந்த மாதவன், அந்தப் பூவை எடுத்துக் கொடுக்க, நந்தினி வெட்கத்துடன் அதனைச் சூடிக் கொண்டாள்.

மறுநாள் இருவரும் பகவதி கோயில் சென்றுவிட்டு வீடு திரும்பினர். வாசலை அடைந்தவுடன், தபாலில் வந்திருந்த வாரப் பத்திரிகை ஒன்று முன் முற்றத்தில் கிடப்பதைப் பார்த்தனர்.

"தமிழ் புக் எப்படி திடீர்னு போஸ்ட்ல வந்திருக்கு?" என்றாள் நந்தினி.

"இங்க கொடு" என்று அவசரமாக அதை வாங்கிப் புரட்டினான் மாதவன்.

ஒரு பக்கத்தைப் பார்த்தவுடன் சிரிப்புடன் அவளிடம் புத்தகத்தை நீட்டினான். 'மேகம்' என்ற தலைப்பில் சிறுகதை ஒன்று பிரசுரமாகியிருக்க, கீழே 'நந்தினிக்குட்டி' என்று அவன் பெயர். சட்டென்று பூரித்த நந்தினி, "இது... இது... எப்படி?" என்று மாதவன் முகத்தைப் பார்க்க, "திரும்பி வந்த

கதையைப் பார்த்தேன். ரொம்ப அற்புதமான கதை. முடிவு மட்டும் சரியில்லை. அதை மாத்தி அனுப்பினேன். பப்ளிஷ் ஆயிடுச்சு'' என்று கூற, சந்தோஷத்தில் கண்கள் கலங்கிய நந்தினி, ''உங்களுக்கு... எப்படி... எப்படி...'' என்றவள், சட்டென்று மாதவனின் தோளில் சாய்ந்து கொண்டாள்.

''நந்தினி...'' என்றபடி மாதவனும் உணர்ச்சிவசப்பட்டு அவளை அணைத்துக் கொண்டான். என்ன நினைத்தானோ, சட்டென்று உடனேயே விலகிவிட்டான்.

''வேண்டாம் நந்தினி. இது சரிப்பட்டு வராது'' என்று திரும்பி நடக்க ஆரம்பித்தான். அவன் கையைப் பிடித்த நந்தினி, ''ஏன் என்னைப் பிடிக்கலையா?'' என்றாள்.

''பிடிச்சிருக்கு. ரொம்பப் பிடிச்சிருக்கு.''

''அப்புறம் ஏன் வேணாங்கறீங்க?''

''பிடிச்சிருக்கு... ஆனா காதல், கல்யாணம்... இதுக்கெல்லாம் சான்ஸே இல்ல.''

''ஏன்?'' என்று நந்தினி கேட்க, மாதவன் பதில் ஒன்றும் சொல்லாமல், தோட்டத்து வீட்டை நோக்கி நடந்தான். கடகடவென்று கண்களில் நீர் வழிய, திரும்பி வீட்டுக்குள் ஓடினாள் நந்தினி.

**ம**றுநாள் விடியற்காலை ஐந்து மணி போல் கதவு தடதடவென்று அடிக்கப்பட... கதவைத் திறந்தாள் நந்தினி. வெளியே கும்பலாய் போலீஸ்காரர்கள்.

''உங்கப்பா எங்க?'' என்றார் உள்ளூர் போலீஸ்காரர் மலையாளத்தில்.

''ஆலப்புழைக்குப் போயிருக்காரு.''

''இவன் இங்கதான் தங்கியிருக்கானா?'' என்று ஒருவர் மாதவனின் ஃபோட்டோவைக் காண்பிக்க, நந்தினி அதிர்ந்து போனாள்.

''எங்க... அவன்?'' என்று கேட்க, அதிர்ச்சியுடன் தோட்டத்துப் பக்கம் கை காட்டினாள்.

ஐந்து நிமிடம் கழித்து, மாதவனை அடித்து, உதைத்தபடி இழுத்து வந்தனர். நந்தினியின் முகத்தை வேதனையுடன் பார்த்தபடி அவளைக் கடந்து சென்றவன்,

''சார் ஒரே... ஒரு நிமிஷம்...'' என்று அவர்களிடம் கெஞ்சிக் கேட்டு நந்தினியை நோக்கி வந்தான்.

''நான் ஏன் வேண்டான்னு சொன்னேன்னு இப்ப புரியுதா? நான் கோயம்புத்தூர்ல ஒரு கம்பெனி தொழிற்சங்கச் செயலாளர். நாற்பது நாள் ஸ்ட்ரைக் பண்ணினோம். திடீர்னு தலைவர், முதலாளிங்ககிட்ட காசு வாங்கிட்டு, எங்க கோரிக்கை எதையும் நிறைவேத்தாமலே சமரச ஒப்பந்தத்துல கையெழுத்துப் போட்டுட்டாரு. அதைத் தட்டிக் கேட்கப் போனப்ப அடிதடியாயிடுச்சு. ஒரு மரக் கட்டைல தலைவர் தலைல பலமா அடிச்சிட்டு வந்துட்டேன். ஆளு ஸ்பாட்லயே அவுட். நானும் ஜெயிலுக்குப் போயிட்டன்னா, சங்கம் வலுவிழந்து போயிடும். அதனால தோழர்கள் என்னைத் தலைமறைவா இருக்கச் சொல்லி இங்க அனுப்பி வச்சாங்க. உங்க அப்பாவுக்கு எல்லா விஷயமும் தெரியும்...'' என்று மாதவன் கூறிக் கொண்டிருக்கும்போதே, ''டேய்... போதும் வாடா...'' என்று போலீஸ் அழைக்க, ''வர்றேன்... நந்தினி...'' என்று கூறிவிட்டு நகர்ந்தான் மாதவன்.

நந்தினி ஒன்றும் பேசத் தோன்றாமல் அழ ஆரம்பித்தாள். ●



''போர் முனைல மன்னர் என்ன எழுதிட்டு இருக்கார்?''

''உடம்புக்கு முடியலையாம்... அரை நாள் லீவு கேட்கறார்!''

- அம்பை தேவா

# 6

# ஆறாயிரம் கி.மீ. அதிசயம்!



உலகின் மிக நீளமான மசால் தோசை சுட்டவர்கள் நமது மராட்டிய சகோதரர்கள். உலகின் நீளமான கேக்கைச் செய்து கின்னஸ் சாதனை படைத்தவர்கள் இத்தாலியர்கள். உலகின் நீளமான மனிதச் சங்கிலியைச் சாதித்துக் காட்டியவர்கள், லத்தீன் அமெரிக்கர்கள். இப்படி நீளும் நீளமான சாதனைகளின் பட்டியல், நெப்ரான்களின் நீளம் முன்பு மண்டியிடுவதைத் தவிர வேறு வழியில்லை. உங்கள் ஒவ்வொரு வரது சிறுநீரகங்களிலும் உள்ள மொத்த நெப்ரான்களையும் ஒரே கயிறுபோல கற்பனை செய்துகொள்ளுங்கள். மெரினா கடற்கரையில் உள்ள உழைப்பாளர் சிலையில் ஒரு முனையைக் கட்டுங்கள். மறுமுனையை கையில் பிடித்தபடி தரை மார்க்கமாக நடந்து சென்று அமெரிக்காவின் நியூயார்க் நகர சுதந்திர தேவி சிலையில் ஒரு சுற்று சுற்றுங்கள். பின் மறுமுனையோடு மெரினாவுக்கே திரும்ப வரலாம். இது ஏதோ பி.சி.சர்க்காரின் மாயாஜாலம் என்று நினைத்து விடாதீர்கள். சிறுநீரகங்களில் உள்ள ஒரு மில்லியன் நெப்ரான்களின் நீளம் சுமார் ஆறாயிரம் கிலோமீட்டர்கள்.




நெப்ரான்கள் நீளத்தில் மட்டுமல்ல, கிளாமருல்லா வடிகட்டி அனுப்பும் நீர்ப் பகுதியில், உடலுக்குத் தேவையானதை உறிஞ்சிக் கொள்வதிலும், தேவையில்லாத கழிவுப் பொருட்கள்

# “மாம்பழம் என்டார்ஸ் மெடிகல் டெக்ஸ்ட் புக்!”

மற்றும் உபரி நீர்ப் பகுதியை பெப்பில்லாக் களுக்கு (Papilla) அனுப்பி வைப்பதிலும் சூப்பர் ஸ்டார்தான். நெப்ரானின் உடல் பகுதி குழல் வடிவில் டிசைன் செய்யப் பட்டிருக்கிறது. ஏறி, இறங்கி, டைவடிக் கும் நெப்ரான் குழல்களின் வித்தைகளைத் தெரிந்துகொள்ளும் முன்பு, சிறுநீரகத்தின் கார்டெக்ஸ் மற்றும் மெடுல்லா பற்றித் தெரிந்துகொண்டால் தப்பில்லை.

**சி**றுநீரகத்தை மாம்பழம்போல எண் ணிக்கொண்டால் கார்டெக்ஸையும் மெடுல்லாவையும் புரிந்துகொள்வது மிக மிகச் சுலபம். அதாவது மாம் பழத்தின் தோலுக்குக் கீழே உள்ள சதைப்பகுதி கார் டெக்ஸ் என்றால், மாம்பழத்தின் விதைப் பகுதி மெடுல்லா. இப்போது இடது சிறு நீரகத்தின் குறுக்கு வெட்டுத் தோற்றத்தில் கார்டெக்ஸ் பகுதி மற்றும் மெடுல்லா வைப் பாருங்கள். கிட்னியின் மெடுல்லா வில் ஆறு முதல் எட்டு பெப்பில்லோக்கள் புதைந்துள்ளன. மாம்பழத்தின் உள்ளே கொட்டை எப்படி தனித்து விடப்படு கிறதோ, அப்படித்தான் இந்த மெடுல்லாவும். இதற்கென்று ஸ்பெஷல் ரத்த ஓட்டம் எதுவும் கிடையாது. கார் டெக்ஸிலிருந்து கசியும் துளி யுண்டு ஆக்ஸிஜன் மற்றும் குளுக்கோஸை வைத்துத்தான் மெடுல்லா உயிர் வாழும். இந்த கார்டெக்ஸும் மெடுல்லாவும் கைகோத்துக் கொண்டிருக்கும் பகுதி யில்தான், நெப்ரான்கள் தங்களின் பரந்து விரிந்த சாம்ராஜ்யத்தைக் கட்டமைத்திருக்கின்றன.

**நெ**ப்ரானின் முதல் பகுதி பவுமென்ஸ் கேப்ஸ்யூல். கிளா மருல்லாஸ் வடிகட்டிய நீர்ப்பகு தியை, பவுமென்ஸ் கேப்ஸ்யூல் ஒரு புனல்போலச் சேமித்து, நெப்ரானின் அடுத்த பகுதியான பி.சி.டி. எனப் படும் தொடக்கச் சுருண்ட குழல் களுக்கு அனுப்பும். இந்த பி.சி.டி. (Proximal Convoluted Tube) குழல்கள்,

டாக்டர் பி.ரவிச்சந்திரன்



நீர்ப்பகுதியில் உள்ள சர்க்கரை, மிக நுண்ணிய புரதம், சோடியம், கால்சியம் மற்றும் இதர முக்கியமான தாதுச் சத்துக்களை மட்டும் திரும்பவும் உறிந்து, வெளிச் செல்லும் வெயின் ரத்தக் குழாய்க்கு அனுப்பி வைக்கிறது. இப்போது பி.சி.டி. குழலானது அடுத்த நிலையில், எங்களின் கீழ்ப் பகுதியான மெடுல்லா நோக்கி ஹேர்பின் வடிவத்தில் இறங்கி ஏறும். இப்படி இறங்கி ஏறுவதை 'லூப் ஆஃப் ஹென்லே' (Loop of Henle) என்கிறார்கள். இந்த ஹேர்பின் வளைவில்தான் உடலுக்குத் தேவையான நீர் மொத்தமும் திரும்ப உறிஞ்சப்படும் அற்புதம் நடக்கிறது. 99% நீரை ஹென்லே உறிஞ்சிக்கொள்ளும். எஞ்சிய ஒரு சதவீத நீர், பி.சி.டி. குழல்கள் நிராகரித்த சோடியம், யூரியா உள்ளிட்ட கழிவுப் பொருட்களையும் சுமந்துகொண்டு டி.சி.டி. (Distal convoluted tubes) எனப்படும் இறுதிச் சுருண்ட குழல்கள் வழியே பயணப்பட்டு, 'கலெக்ட்டிங் டக்ட்' எனப்படும் சேமிப்புக் குழல் மூலம் சிறுநீர்ப் பைக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. பல லட்சம் சேமிப்புக் குழல்கள் வழியே கொட்டும் கழிவுகளைச் சேமித்து, சிறுநீர் குழாய்க்கு அனுப்பும் புனல் போன்ற அமைப்பின் பெயர் கேலிக்ஸ்.

கிளாமருலாஸ் வடிகட்டித் தந்த நீர்ப் பகுதி, நெப்ரானின் குழல்கள் வழியே செல்வதையும், பி.சி.டி. மற்றும் ஹென்லே குழல்களின் மூலம் திரும்ப உறிஞ்சப்படுவதையும், தமிழ் மக்களின் விஞ்ஞானி ஜி.டி.நாயுடு தமது எளிய பாணியில் புரியவைக்க முற்பட்டால் எப்படியிருக்கும்? அப்படியொரு அசத்தல் வரைபடத்தைத்தான் முன் பக்கத்தில் காண்கிறீர்கள். புரிந்துவிட்டதா? இனி 'ஜி.எஃப். ரேட்' பற்றிய சிறுகுறிப்பு உங்கள் அறிவு வங்கிக்கு...

கிளாமருல்லாஸ் ஒரு நிமிடத்துக்கு 180 மில்லி ரத்தத்தை வடிகட்டுகிறது. இதில் ரத்த அணுக்கள், கொழுப்பு மற்றும் பெரிய வடிவம் கொண்ட புரதங்கள் ஆகியவை கிளாமருல்லா வடிகட்டியை விட்டுக் கீழே இறங்காது. குளுகோஸ், அமினோ அமிலங்கள், மிக நுண்ணிய புரதங்கள், தாதுப் பொருட்கள், நீர் ஆகியவை மட்டுமே கீழே இறங்கும். இப்படி வடிகட்டப்பட்ட பொருட்கள் பவுமென்ஸ் கேப்ஸ்யூல் புனல் பகுதிக்கு வரும்போது நூற்றி இருபது மில்லியாக இருக்கும். இது பி.சி.டி., ஹென்லே ஆகியவற்றால் உறிஞ்சப்பட்டு டி.சி.டி. குழாய்க்கு வரும்போது வெறும் ஒரு மில்லியாகக் குறைந்துவிடும். நிமிடத்துக்கு ஒரு மில்லி சிறுநீர் என்றால், ஒரு நாளைக்குச் சராசரியாக 1.5 லிட்டர் சிறுநீர் கழிக்கிறீர்கள். இதைத்தான் கிளாமருல்லாஸ் ஃபில்ட்ரேஷன் ரேட் (G.F. Rate) என்கிறார்கள். இனி நெப்ரானின் தொடர் பயணத்தில் நடைபெறும் ஜாலங்களை அடுத்த வாரம் பார்க்கலாம்...

(பயணம் தொடரும்)

புதிய வேகத்துடன் புறப்படத் தயாராகிவிட்டார் விக்னேஷ். "இதுவரை எப்படியோ, இனி என்கிட்ட ஏகப்பட்ட மாற்றங்கள் இருக்கப் போகுது. முதற்கட்டமா 'மலரினும் மெல்லியது'ங்கற படத்துல நல்ல கேரக்டர்ல நடிச்சிட்டு வர்றேன். முதல் முறையா ஒரு நல்ல காதல் கதைல நடிச்ச திருப்தி கிடைச்சிருக்கு. இயக்குநர், இசையமைப்பாளர், நாயகின்னு எல்லாரும் புதுசுதான். ஆனா இப்படி ஒரு ஸ்போர்டிவான டீம் இதுவரை எனக்கு அமைஞ்சதே இல்ல. எல்லாம் நல்லா போயிட்டிருக்கு. விக்னேஷ் அவ்வளவுதான்னு சொன்னவங்களுக்கு என்னோட ரீ என்ட்ரிதான் பதில்" என்கிறார் விக்னேஷ். அசத்தினா சரிதான் அப்பு! – ஜீவி



* பாண்டியராஜன்

சாஃப்ட்வேர் படிப்பு படித்த மற்றொரு இன்ஜினியருக்கு மாதம் இரண்டாயிரத்து எண்ணூறு ரூபாய் ஊதியம் கொடுக்கக் கூடிய வேலைகூட கிடைக்கவில்லை. இருவருமே சாஃப்ட்வேர் படித்திருந்தாலும் படித்த கல்லூரி, தேர்ச்சி விகிதம். வேலைக்குத் தேர்வு செய்யப்படும் தேர்வு முறைகள் போன்றவற்றால் வாய்ப்புகள் மாறுபடுகின்றன.

இதுதான் விஷயம். படித்தவுடன் சிலருக்கு எல்லா தகுதிகளுமிருந்து உடனேயே வேலை கிடைத்துவிடும். சிலருக்குப் படிப்புத் தகுதியிருந்தும் வேறு மாதிரியான திறமைகள் இல்லாததால் சரியான பணி அமையாது.

இன்றைய சூழலில் வெளிநாடுகளில் எண்ணெய் மற்றும் எரிவாயு, தகவல் தொழில் நுட்பம், வங்கி, கல்வி, உடல்நலம் (மருத்துவர்கள், செவிலியர்கள்) மற்றும் மின் - கற்பித்தல் போன்ற துறைகளில் இந்தியர்களுக்கு ஏராளமான வேலைவாய்ப்புகள் உள்ளன. தகவல் தொழில்நுட்பத் துறையைவிட எண்ணெய் மற்றும் எரிவாயுத் துறையில் அதிகமான வேலைவாய்ப்புகள் உள்ளனவென்பது ஆச்சரியமான விஷயம்.

அதேபோல் அழகாக ஆங்கிலம் பேசினால்தான் விரைவாக வேலைவாய்ப்பு கிடைக்கும் என்பதில் எனக்கு உடன்பாடு கிடையாது. வேலை கிடைப்பதற்கு ஆங்கிலம் மட்டுமே அவசியமல்ல. ஆங்கிலமும் அவசியம். போட்டிகள் நிறைந்த இன்றைய உலகில் தங்களது பேச்சுத் திறன், எழுத்துத் திறன், தகவல் பரிமாற்றத் திறன் போன்றவற்றைப் படிக்கும் பருவத்திலிருந்தே வளர்த்துக்கொள்வது அவசியம். பள்ளி, கல்லூரிப் படிப்புகளின்போது Paper presentation, Seminar, Group Discussion போன்றவற்றில் பங்குகொள்ள வேண்டும். இவை அனைத்துக்கும் அடிப்படையாக புத்தகம் வாசிப்பதை வழக்கமாக்கிகொள்ள

படித்து முடித்த உடனேயே வேலை கிடைக்குமா? - இன்றைய இளைஞர்களின் மில்லியன் டாலர் கேள்வி இதுதான். மாஃபா என்னும் மனிதவள மேம்பாட்டு நிறுவனத்தை நடத்தி இளைஞர்களின் வழிகாட்டியாய்த் திகழ்ந்து வரும் பாண்டியராஜனிடம் இந்தக் கேள்வியை முன் வைத்தோம்.

"இது ஒரு வரியில் பதில் சொல்லிவிடக்கூடிய விஷயமல்ல; ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய கருத்து.

இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் இன்ஜினியரிங் படித்து முடிப்பவர்களில் 82% பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள். ஒரு வருடம் கழித்தும் இந்த மாணவர்களில் 10% பேர் பணியின்றிதான் இருக்கிறார்கள். ஒரு கம்ப்யூட்டர் நிறுவனத்தில் சாஃப்ட்வேர் இன்ஜினியர் ஒருவருக்கு, ஆண்டு ஊதியமாக இருபத்தெட்டு லட்ச ரூபாய் கொடுக்கப்படுகிறது. அதே

# படிப்பை முடித்தவுடன் வேலை?



வேண்டும். பாடத் திட்டத்தில் உள்ள வற்றை மட்டுமே படிக்காமல், மேற்கண்ட திறமைகளும் இருப்பின் அவை மாணவர்களுடைய வேலைவாய்ப்புத் தேர்வின்போது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். பெற்றோரும் தங்களுடைய குழந்தைகள் படிப்போடு சேர்த்து மற்ற திறமைகளையும் வளர்த்துக்கொள்கிறார்களா என்பதைக் கண்காணித்து, உற்சா கப்படுத்த வேண்டும்.

நேர்முகத் தேர்வுக்குச் செல்லும்போது மாணவர்கள் மிகுந்த தயாரிப்போடு செல்ல வேண்டும். தகவல் பரிமாற்றத் திறன் என்பது இந்தத் தேர்வுக்கு மிக அவசியம். 33% மாணவர்களுக்கு நேர்முகத் தேர்வின் போது ஏற்படும் பயம், பதற்றம், தகவல் பரிமாற்ற இடைவெளி போன்ற காரணங் களால்தான் வேலை கிடைக்காமல் போய் விடுகிறது. சில மாணவர்கள் தங்களது துறையில் மிகச் சிறந்த மதிப்பெண்கள் பெற்றிருந்தாலும், நேர்முகத் தேர்வின் போது மொழிப் பிரச்னை, தமக்குத் தெரிந்த வற்றை வெளிப்படுத்தும் திறன் குறைவு போன்ற காரணங்களால் வேலை வாய்ப்பை இழக்கிறார்கள். மாணவர்கள் படிக்கும்பொழுது கேம்பஸ் இன்டர் வியூவை எதிர்கொண்டு அனுபவம் பெற்றிருந்தால், அந்த அனுபவம் இது போன்ற நேர்முகத் தேர்வுகளுக்குப் பெரும் உதவியாக இருக்கும். எந்த ஒரு திறமை யையும் ஆர்வத்தோடு வளர்த்துக் கொள்ள வேண்டும். எல்லாவற்றையும்விட இன் றைய இளைஞர்கள் எல்லோருக்கும் இருக்க வேண்டியது தன்னம்பிக்கை. எந்த ஒரு செயலிலும் நம்பிக்கையை தமதாக்கிக் கொண்டால் வெற்றி நிச்சயம்.'' என்கிறார் பாண்டியராஜன்.

- உ.கிறிஸ்டோபர் சார்லஸ்

படம் : ஸ்ரீஹரி

வெள்ளம் வந்த வீட்டில் பத்திரப் படுத்திய விதை நெல்லாய் பச்சியப்பனின் தும்பிகள் மரணமுறும் காலம் கட்டுரைத் தொகுப்பு நமக்குக் கிடைத்துள்ளது.

டாஸ்மாக் என்னும் சிலந்தி வலை தமிழகத்து கிராமங்களையும் இப்போது கனகச்சிதமாய் பின்னியிருப்பதுபோல், முன்பிருந்த சாராய ஊறல்கள் எப்படிக் குடும்பங்களை அழித்தன என்பது முதல் மண்புழுவை விரட்டி விரட்டிக் கொல்ல நம் அறிவாளிகள் பரிந்துரைத்த இரசாயன உரங்கள் எப்படி பசுமையின் கழுத்தை ரத்தம் சொட்டச் சொட்ட அறுத்தன என்பது வரை இந்நூல் ஆறாத தழும்புகளை யெல்லாம் ஆவணப்படுத்தியிருக்கிறது.

நமது நிலத்தடி நீர் எங்கே ஓடி ஒளிந் தது? நமது தாய் மரங்களின் இலைகளை மொட்டையாக்கியது யார்? துடி கொண் டாடிய தெய்வங்களின் சந்நதம் எங்கே போய்த் தொலைந்தது? ஒற்றைக் கலாசாரப் போர்வை வாரிச் சுருட்டிக் கொண்டிருப் பது எவற்றையெல்லாம்? என்று கண்ணீர் மல்க இந்தப் புத்தகம் கேள்வி எழுப்பு கிறது.

'நிலமென்னும் நல்லாள்' கட்டுரையில், விளைகிற பொருளுக்குச் சரியான விலை யைக் கொடுத்தாலே உழவன் பிழைத்துக் கொள்வான் என்கிறார் பச்சியப்பன்.

சரி, உடைந்த மண்பானைச் சில்லு களைச் செதுக்கிச் செதுக்கி, சிலேட்டில் அதையே எழுது குச்சியாகப் பயன்படுத்தி எழுதிப் படித்து இலக்கியம் எழுத வந்தால், 'கிராமம் கிராமம் என்கிறீர்களே அங்கேயே போய்விடவேண்டியதுதானே' என்கிறார்கள். வண்டி மாட்டை விற்ற போது வந்த கண்ணீரையும் வலியையும் இவர்களுக்கு எழுத்தில் சொல்லிப் புரிய வைக்க முடியாதல்லவா? மண்வெட்டி பெயர்த்த பெருவிரல் நகத்தின் வேதனை, பூட்சு கால்களுக்குப் புரியும் காலம் ஒரு நாள் வரும்.

- வே.இராமசாமி

தும்பிகள் மரணமுறும் காலம்,
பொன்னி வெளியீடு,
ப.எண் : 387, பு.எண் : 854,
அண்ணாசாலை, சைதாப்பேட்டை,
சென்னை - 15



கதை : படுதலம் சுகுமாரன் படம் : ஜெயராஜ்

துப்பறியும்

# இறந்தவனைத் தேடு! 6

ஒரு லேத்துப் பட்டறை வாசல் முன் ஆந்திர லாரி நிற்க... அதிலிருந்து எட்டிப் பார்த்த டிரைவர்

ம்.... சீக்கிரம்.... சீக்கிரம்....

பட்டறையிலிருந்து இரண்டு மரப்பெட்டிகள் லாரியில் ஏற்றப்பட்டன.

மூர்த்தியின் கையாள் தர்மா டிரைவரிடம்...

அலாகே, சார்... மூர்த்தி சார் லேதா?

ரேணிகுண்டா டெர்மினல்ல இறக்கிடு. அடுத்த 'ட்ரிப்'ல மீதி வந்து சேர்ந்துடும்னு சொல்லு...

அவர் செத்துட்டார்யா...

வெளியில அப்படி பேர் பண்ணியிருக்கு. சாரை அப்புறம் ரெண்டுதரம் நேனு சூசானு.

சத்தமா பேசாத... இங்க சல்லடை போட்டுத் தேடிக்கிட்டிருக்காங்க. இந்தா உன் கமிஷன்...

தேங்க்ஸ்.


லாரி போய்விட, தர்மா பட்டறையுள் வந்து அங்குள்ள ஆட்களிடம்...
ஆயுதங்களின் மீதி உதிரி பாகங்களையும் பண்ணிட்டு, கொஞ்ச காலத்துக்குப் பட்டறையை மூடி வைக்கணும்...


அப்போது செல் ஃபோனில் வந்த ஒரு தகவல் கேட்டுத் திகைத்தான் தர்மா.
ஆந்திராவுக்கு அரிசி கடத்தும் லாரியைக் கண்டுபிடிக்க, செக் போஸ்ட்ல லாரிகளை நிறுத்திட்டாங்க...!


சுதாரித்தவன், உடனே டிரைவரிடம் பேசினான்...
ஜாக்கிரதையாய் இரு... மாட்டிக்காதே. தேவைப்பட்டால் எஸ்கேப் ஆயிடு...
சரி..


பட்டறையாட்களிடம் -
லாரியை செக் போஸ்ட்ல மடக்கியிருக்காங்க. ஆபத்து வரலாம். ஷட்டரை மூடுங்க!
எப்ப வரணும்னு நான் தகவல் சொல்றேன். அது வரை எங்காவது போய் மறைஞ்சுடுங்க !


அவர்களிடம் பேசி முடித்த கையோடு பைக்கை விருட்டென்று கிளப்பிக்கொண்டு மறைந்தான் தர்மா.

அதே நேரம் விஷ்வா,
எம்.எல்.ஏ. ஹாஸ்டல் நோக்கி
பைக்கில் விரைந்து
கொண்டிருந்தான்...

எம்.எல்.ஏ. வாயைக்
கிண்டினால் துப்பு
கிடைக்குமா, துப்பறது
கிடைக்குமா...

நான் என்னை மறந்தாலும்
தொண்டர்களை மறக்க மாட்டேன்.

செல்வராக தங்கமானவன்.
போன எலக்ஷனப்ப ரொம்ப
உழைச்சான்...

அவன் காணாமப்
போனது தேசத்துக்கே
இழப்பு...

இதைப்பற்றி
தேவைப்பட்டால் நான்
ஐ.நா. சபையில்கூட
பேசுவேன்...

கடுப்பான விஷ்வா, சட்டென்று எழுந்து
கொண்டான்...

சாமி...
தகவலுக்கு நன்றி...
நான்
புறப்படுறேன்...

தொடரும்.

# பகவான் வைக்கும் டெஸ்ட்!

லோகத்தில் சில பேர் ஏன் ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள் என்றால், மற்றவர்கள் அவர்களுக்குப் பரோபகாரம் செய்கிறார்களா என்று பார்ப்பதற்காகத்தான் ஈஸ்வரன் இப்படிப் பரீட்சை பண்ணுகிறான் என்று சொல்வதுண்டு. 'அவனவன் தன் கர்மாவுக்காகக் கஷ்டப்படுகிறான்; நாம் உதவி பண்ணினாலும்கூட அவன் பலன் அடைய முடியாதபடி கர்மா குறுக்கே நிற்கலாம்' என்பதும் வாஸ்தவம்தான். ஆனால், நம் உபகாரத்தால் அவன் கர்மா தீருகிறதோ தீரவில்லையோ, நம்மாலான பிரயாசையை நாம் பண்ணுவதுதான் மனுஷ்ய தர்மம். ஒருத்தனைக் கர்மாவுக்காக தண்டிக்கிறபோதே ஈஸ்வரன் மற்றவர்களுடைய பரோபகார சித்தத்துக்கும் அதை ஒரு 'டெஸ்ட்'டாக வைக்கிறான் என்றுதான் நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். நாம் உபகாரம் பண்ணியும் அது அவனுக்குப் பிரயோஜனமாகாவிட்டால்தான், கஷ்டம் என்பது அவன் கர்மாவுக்குத் தண்டனை என்று சொல்லலாம். அநேக சமயங்களில் பரோபகாரத்தினால் பிறத்தியார் கஷ்டத்தைப் போக்கவும் முடிகிறதே! அப்படியானால் என்ன அர்த்தம்? நாம் பரோபகாரம் பண்ணி அவன் கஷ்டத்தைப் போக்குகிறோமா என்று பகவான் 'டெஸ்ட்' பண்ணியதாகத்தானே அர்த்தம்!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

## கனவின் நுழைவாயில்

# எழுத்தொளி வித்தகர்!

## கே.வி.ஆனந்த்

தமது முதல் படத்திலேயே (தேன்மாவின் கொம்பத்து - மலையாளம்) தேசிய விருது பெற்றவர்; சமீபத்திய 'சிவாஜி'க்காக ரசிகர்களின் பாராட்டு விருதுகளைக் குவித்து, தமது மன அலமாரியில் அடுக்கிக் கொண்டிருக்கும் ஒளிப்பதிவாளர் கே.வி.ஆனந்த், தமது எண்ண ஒளிச் சிதறல்களை இங்கே சொல்கிறார்.

### கறுப்பு - வெள்ளை

அமரர் கல்கி அவர்களை 'எழுத்து ஒளிப்பதிவாளர்' என்று சொன்னால் அது மிகையில்லை. அவரது நாவல்களில் இயற்கையை வர்ணிக்கும் விதத்தில் ஒளிப்பதிவுக்கான அறிவுத்திறன் மின்னும். சோழ சாம்ராஜ்யத்தின் பசுமையைக் குறிப்பிட ஓரிடத்தில் அவர் வர்ணித்திருந்த விதம் என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

வயல்வெளி ஒன்றில் கொக்கு ஒன்று ஒற்றைக் காலில் நின்றிருப்பதாகவும், அதன் பின்னணியில் தெரியும் வயல் வெளிகள் மிகவும் பசுமையோடு காட்சியளிப்பதாகவும் சொல்லியிருப்பார். இது ஒளிப்பதிவின் நுணுக்கம். ஒரு நிறத்தை தூக்கிக் காட்ட வேண்டுமெனில் வெள்ளை நிறத்தைக் கொண்டுதான் காட்ட வேண்டும். இந்த நுணுக்கம் வெகு இயல்பாக அவர் எழுத்தில் கலந்து விரவியிருக்கிறது.

அவரைப் பற்றிச் சொல்லும்போது ஓவியர் 'மணியம்' பற்றியும் அவசியம்



✱ படம்: ஸ்ரீஹரி

குறிப்பிட வேண்டும். 'பொன்னியின் செல்வன்' படைப்புக்கு உயிரூட்டியதில் அவரது பங்கும் உண்டு. இருவரும் எத்தகைய உழைப்பாளிகள் என்பதற்கு நாவலும் ஓவியமும் சாட்சிகளாக நம்மிடம் உள்ளன.

ஏதோ வரலாற்றுப் புத்தகத்தில் படித்த விஷயங்களை வைத்து, கற்பனையைக் கலந்து, நான்கு சுவர்களுக்குள் அமர்ந்து எழுதிய படைப்புகளல்ல கல்கியின் நாவல்கள். சம்பந்தப்பட்ட இடங்களுக்குச் சென்று, நாட்கணக்கிலும் வாரக்கணக்கிலும் தங்கியிருந்து, கல்வெட்டுகள், ஆவணங்களைப் பார்த்து அணு அணுவாகத் தகவல்களைச் சேகரித்து எழுதப்பட்டவை.

கல்கி அவர்கள் ஒவ்வொரு காட்சியையும் சொல்ல, மணியம் அவற்றை மிக நுணுக்கமாக வரைந்திருப்பார். சோழ ராஜ்யத்தில் பயன்படுத்தப்பட்ட பல்லக்கு, அரசர்களின் கிரீடம், அரசர் வைத்துள்ள வாள், தளபதியின் வாள், ஒரு சேவகனின் குறுங்கத்தி என்று ஒவ்வொன்றுக்குமான வேறுபாட்டை படங்களில் பார்க்கலாம். அரசர் அணியும் ஆடை, சாதாரணக் குடியானவன் அணியும் ஆடை, கோயில் சிற்பங்கள்... என்று சொல்லிக்கொண்டே போகலாம்.

இரவை இரவாக ஓவியங்களில் காட்டுவது மிகச் சவாலான விஷயம். அதிலும் அச்சுக் கலையில் பெரிய தொழில்நுட்பம் ஏற்படாத நாற்பது, ஐம்பதுகளில் 'மணியம்' அந்தச் சவாலைச் சந்தித்து வெற்றி பெற்றுள்ளார். முழுக்க முழுக்க கறுப்புப் பின்னணியில் வெள்ளைக் கோடுகளாக வரைந்து இரவுக் காட்சியை அற்புதமாகக் காட்டியிருப்பார்.



**ஏதோ வரலாற்றுப் புத்தகத்தில் படித்த விஷயங்களை வைத்து, கற்பனையைக் கலந்து, நான்கு சுவர்களுக்குள் அமர்ந்து எழுதிய படைப்புகளல்ல...**

இரவில் ஒரு சாதாரணக் குடியானவன் வீட்டில் எரியும் விளக்கு. அதனருகே தெரியும் முகங்கள், பின்னணிக் காட்சிகளென ஒரு திரைப்படத்துக்கான அத்தனை விஷயங்களும் காணப்படும்.

கல்கியின் சரித்திர நாவல்களைத் திரைப்படமாக்குவதென தீர்மானித்தால் எங்களுக்கு அதிக வேலையே இருக்காது. காரணம் எழுத்தில், வர்ணனையிலேயே காட்சியின் நுணுக்கங்களைக் கொடுத்துவிட்டிருக்கிறார். ஒருமுறை படித்து, அந்த ஓவியங்களைப் பார்த்துக்கொண்டாலே போதும், கேமராவைத் தூக்கிக்கொண்டு படப்பிடிப்புக்குச் சென்றுவிடலாம். அந்த அளவுக்கு எல்லாவற்றையும் தயாராக வைத்துவிட்டே சென்றுள்ளார்.

'சரித்திரப் படங்களை இனிமேல் யாரும் பார்க்க மாட்டார்கள்' என்று மக்களின் மீது பழிபோட்டுத் தப்பிவிட முடியாது. சமீபத்தில் அப்படி எத்தனை படங்களை மக்கள் புறக்கணித்தார்கள்? எத்தனை படங்கள் தோற்றுப் போயின? அப்படி எந்தப் படமும் வரவேயில்லை! ஒன்றைக் கொடுத்துப் பார்க்காமலேயே ரசிகர்கள் ஏற்க மாட்டார்கள் என்று சொல்வது நியாயமில்லை.

மற்ற மொழிகளில் சரித்திரப் படங்களுக்கான முயற்சிகள் எப்படியெல்லாம் நடந்து கொண்டிருக்கிறதெனத் தெரியுமா?

(அடுத்த வாரம்)

## 11. ரணகளம்

புரட்டாசி மாதத்துப் பௌர்ணமி இரவில் வெண்ணாற்றங்கரை மிகவும் கோரமான காட்சியை அளித்தது. வானத்தில் வெண்ணிலவைப் பொழிந்தவண்ணம் பவனி வந்துகொண்டிருந்த பூரணச் சந்திரனும், அந்தக் கொடுங்காட்சியைக் காணச் சகியாதவன் போல், அடிக்கடி வெள்ளி மேகத் திரையிட்டுத் தன்னை மறைத்துக்கொண்டான்.

பகலெல்லாம் அந்த நதிக்கரையில் நடந்த பயங்கரமான யுத்தத்தில் மடிந்தவர்களின் இரத்தம் வெள்ளத்துடன் கலந்தபடியால் அன்றிரவு இரத்த வெள்ளம் ஓடுவதாகவே தோன்றியது. அந்த வெள்ளத்தில் பிரதிபலித்த பூரணச் சந்திரனின் பிம்பமும் செக்கச் செவேலென்ற இரத்த நிறமடைந்து காணப்பட்டது.

நதியின் மேற்குக் கரையில் கண்ணுக்கெட்டிய தூரம் கொடும் போர் நடந்த ரணகளத்தின் கோரமான காட்சிதான். வீரசொர்க்கம் அடைந்த ஆயிரக்கணக்கான போர் வீரர்களின் உடல்கள் அந்த ரணகளமெங்கும் சிதறிக் கிடந்தன. சில இடங்களில் அவை கும்பல் கும்பலாகக் கிடந்தன. கால் வேறு, கை வேறாகச் சிதையுண்டு கிடந்த உடல்கள் எத்தனையோ! மனிதர்களைப் போலவே போரில் மடிந்த குதிரைகளும் ஆங்காங்கே காணப்பட்டன. வெகுதூரத்தில் குன்றுகளைப் போல சில கறுத்த உருவங்கள் விழுந்து கிடந்தன. அவை போர் யானைகளாகத்தான் இருக்க வேண்டும்.

அந்த ரணகளத்தில் விருந்துண்ண ஆசைகொண்ட நூற்றுக்கணக்கான கழுகுகளும், பருந்துகளும் நாலா பக்கங்களிலிருந்தும் பறந்து வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவற்றின் விரித்த சிறகுகளின் நிழல் பெரிதாகவும் சிறிதாகவும் ரணகளத்தின் மேல் ஆங்காங்கே விழுந்து, அதன் பயங்கரத்தை மிகுதிப் படுத்திக்கொண்டிருந்தன.

நதியின் இனிய 'மரமர' சப்தத்தைப் பருந்துகள், கழுகுகளின் கர்ண கடூரமான குரல்கள் அடிக்கடி குலைத்துக் கொண்டிருந்தன.

அந்தக் கோரமான ரணகளத்தில், மெல்லிய மேகத் திரைகளினாலும் வட்டமிட்ட பருந்துகளின் நிழலினாலும் மங்கிய நிலவொளியில், ஒரு மனித உருவம் மெல்ல மெல்ல நடந்து போய்க்கொண்டிருந்தது. அது சுற்று முற்றும் உற்றுப் பார்த்துக்கொண்டே போயிற்று.

சற்று நெருங்கிப் பார்த்தால் அது ஒரு

**அமரர் கல்கி**



**பார்த்திபன் கனவு**

சிவனடியாரின் உருவம் என்பது தெரிய வரும்.

தலையில் சடைமுடியும், நெற்றி நிறையத் திருநீறும், அப்போதுதான் நரை தோன்றிய நீண்ட தாடியும், கழுத்தில் ருத்திராட்ச மாலையும், அரையில் காவி வஸ்திரமும், மார்பில் புலித்தோலுமாக அந்தச் சிவனடியார் விளங்கினார். அவர் கையில் கமண்டலம் இருந்தது. அவருடைய முகத்தில் அபூர்வமான தேஜஸ் திகழ்ந்தது. விசாலமான கண்களில் அறிவொளி வீசிற்று. தோற்றமோ வெகு கம்பீரமாயிருந்தது. நடையிலும் ஒரு பெருமிதம் காணப்பட்டது. இந்த மகான் சிவனடியார்தானோ அல்லது சிவபெருமானே இத்தகைய உருவம் பூண்டு வந்தாரோ என்று திகைக்கும்படியிருந்தது.

இந்தப் பயங்கர ரணகளத்தில் இந்தப் பெரியாருக்கு என்ன வேலை? யாரைத் தேடி அல்லது என்னத்தைத் தேடி இவர் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு போகிறார்?

சிவனடியார் எந்தத் திசையை நோக்கிப் போனாரோ, அதற்கு எதிர்த்திசையில் கொஞ்ச தூரத்தில் கருங்குன்று ஒன்று நகர்ந்து வருவதுபோல் ஒரு பிரம்மாண்டமான உருவம் அசைந்து வருவது தெரிந்தது. அது சோழ மன்னரின் பட்டத்துப் போர் யானைதான்.

அதைக் கண்டதும் சிவனடியார் சிறிது தயங்கித் தாம் நின்ற இடத்திலேயே நின்றார்.

யானையின் தேகத்தில் பல இடங்களில் காயம்பட்டு இரத்தம் வடிந்துகொண்டிருந்தது. நடக்க முடியாமல் அது தன்



ளாடி நடந்தது என்பது நன்றாய்த் தெரிந்தது. கீழே கிடந்த போர் வீரர்களின் உயிரற்ற உடல்களை மிதிக்கக் கூடாதென்று அது ஜாக்கிரதையாக அடி எடுத்து வைத்து நடந்தது. துதிக்கையை அப்படியும் இப்படியும் நீட்டி அங்கே கிடந்த உடல்களைத் தடவிப் பார்த்துக் கொண்டே வந்ததைப் பார்த்தால், அந்த யானை எதையோ தேடி வருவதுபோல் தோன்றியது.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் பட்டத்து யானையானது, உயிரற்ற உடம்புகள் குவியலாக ஒன்றன்மேல் ஒன்றாகக் கிடந்த ஓர் இடத்துக்கு வந்து நின்றது. அந்த உடல்களை ஒவ்வொன்றாக எடுத்து அப்பால் மெதுவாக வைக்கத் தொடங்கியது.

இதைக் கண்டதும் சிவனடியார் இன்னும் சற்று நெருங்கிச் சென்றார். சமீபத்தில் தனித்து நின்ற ஒரு கருவேல மரத்தின் மறைவில், நின்று யானையின் செய்கையை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்.

யானை, அந்த உயிரற்ற உடல்களை ஒவ்வொன்றாய் எடுத்து அப்புறப்படுத்திற்று. எல்லாவற்றுக்கும் அடியில் இருந்த உடலை உற்று நோக்கிற்று. அதைத் துதிக்கையினால் மூன்று தடவை மெதுவாகத் தடவிக் கொடுத்தது.

பிறகு அங்கிருந்து நகர்ந்து, சற்றுத் தூரத்தில் வெறுமையாயிருந்த இடத்துக்குச் சென்றது. துதிக்கையை வானத்தை நோக்கி உயர்த்திற்று.

சொல்ல முடியாத சோகமும் தீனமும் உடைய ஒரு பெரிய பிரலாபக் குரல் அப்போது அந்த யானையின் தொண்டையிலிருந்து கிளம்பி, ரணகளத்தைத் தாண்டி நதியின் வெள்ளத்தைத் தாண்டி, நெல் வயல்களையெல்லாம் தாண்டி, வான முகடுவரையில் சென்று எதிரொலி செய்து மறைந்தது.

அவ்விதம் பிரலாபித்துவிட்டு அந்த யானை, குன்று சாய்ந்ததுபோல் கீழே விழுந்தது. சில வினாடிக்கெல்லாம் பூகம்பத்தின்போது மலை அதிர்வது போல அதன் பேருடல் இரண்டு தடவை அதிர்ந்தது. அப்புறம் ஒன்றுமில்லை! எல்லையற்ற அமைதிதான்.

சிவனடியார் கருவேல மரத்தின் மறைவிலிருந்து வெளிவந்து, யானை தேடிக் கண்டுபிடித்த உடல் கிடந்த இடத்தை நோக்கி வந்தார். அதன் அருகில் வந்து சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். பார்த்திப மகாராஜாவின் உடல்தான் அது என்பதைக் கண்டார்.

உடனே அவ்விடத்தில் உட்கார்ந்து அவ்வுடலின் நெற்றியையும் மார்பையும் தொட்டுப் பார்த்தார். பிறகு, தலையை எடுத்து தம் மடிமீது வைத்துக்கொண்டார். கமண்டலத்திலிருந்து கொஞ்சம் ஜலம் எடுத்து முகத்தில் தெளித்தார்.

உயிரற்றுத் தோன்றிய அந்த முகத்தில் சிறிது நேரத்துக்கெல்லாம் ஜீவகளை துளிர்த்தது. மெதுவாகக் கண்கள் திறந்தன. பாதி திறந்த கண்களால்

"எனக்கு ஒரு கைம்மாறும் வேண்டாம் பார்த்திபா! உன்னைப் போன்ற சுத்த வீரர்களுக்குத் தொண்டு செய்வதையே தர்மமாய்க் கொண்டவன் நான்"



பார்த்திபன் சிவனடியாரை உற்றுப் பார்த்தான்.

''சுவாமி... தாங்கள் யார்?'' என்ற நீளமான வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வந்தன.

''அம்பலத்தாடும் பெருமானின் அடியார்க்கு அடியவன் நான். அப்பா! இன்று நடந்த யுத்தத்தில் உன்னுடைய ஆச்சரியமான வீரச் செயல்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அப்பேர்ப்பட்ட மகாவீரனைத் தரிசிக்க வேண்டுமென்று வந்தேன். பார்த்திபா! உன்னுடைய மாசற்ற சுத்த வீரத்தின் புகழ் என்றென்றும் இவ்வுலகிலிருந்து மறையாது!'' என்றார் அப்பெரியார்.

''யுத்தம் - என்னவாய் முடிந்தது, சுவாமி?'' என்று பார்த்திபன் ஈனஸ்வரத்தில் கேட்டான். அவனுடைய ஒளிமங்கிய கண்களில் அப்போது அளவிலாத ஆவல் காணப்பட்டது.

''அதைப் பற்றிச் சந்தேகம் உனக்கு இருக்கிறதா, பார்த்திபா? அதோ கேள், பல்லவ சைன்யத்தின் ஜயகோலாகலத்தை!''

பார்த்திபன் முகம் சுணுங்கிற்று. ''அதை நான் கேட்கவில்லை சுவாமி! சோழ சைன்யத்திலே யாராவது...'' என்று மேலே சொல்லத் தயங்கினான்.

''இல்லை; இல்லை. சோழ சைன்யத்தில் ஒருவன்கூடத் திரும்பிப் போகவில்லை. அப்பா! ஒருவனாவது எதிரியிடம் சரணாகதி அடையவும் இல்லை. அவ்வளவு பேரும் போர்க்களத்திலே மடிந்து வீர சொர்க்கம் அடைந்தார்கள்!'' என்றார் சிவனடியார். பார்த்திபனுடைய கண்கள் மகிழ்ச்சியினால் மலர்ந்தன.

''ஆகா! சோழ நாட்டுக்கு நற்காலம் பிறந்துவிட்டது சுவாமி! இவ்வளவு சந்தோஷமான செய்தியைச் சொன்னீர்களே? உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?'' என்றான்.

''எனக்கு ஒரு கைம்மாறும் வேண்டாம் பார்த்திபா! உன்னைப் போன்ற சுத்த வீரர்களுக்குத் தொண்டு செய்வதையே தர்மமாய்க் கொண்டவன் நான். உன் மனத்தில் ஏதாவது குறை இருந்தால் சொல்லு; பூர்த்தியாகாத மனோரதம் ஏதாவது இருந்தால் தெரிவி. நான் நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றார்.

''மெய்யாகவா? ஆகா என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் சுவாமி! உண்மைதான்; என் மனத்தில் ஒரு குறை இருக்கிறது. சோழநாடு தன் புராதனப் பெருமையை இழந்து இப்படிப் பராதீன

மடைந்திருக்கிறதே என்பதுதான் அந்தக் குறை. சோழ நாடு முன்னைப்போல் சுதந்திர நாடாக வேண்டும். மகோன்னதமடைய வேண்டும். தூர தூர தேசங்களில் எல்லாம் புலிக்கொடி பறக்க வேண்டும் என்று கனவு கண்டு வந்தேன்; என்னுடைய வாழ்க்கையில் அது கனவாகவே முடிந்தது. என்னுடைய மகன் காலத்திலாவது அது நனவாக வேண்டுமென்பதுதான் என் மனோரதம். விக்கிரமன் வீரமகனாய் வளர வேண்டும். சோழ நாட்டின் மேன்மையே அவன் வாழ்க்கையின் இலட்சியமாயிருக்க வேண்டும். உயிர் பெரிதல்ல - சுகம் பெரிதல்ல - மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும். அந்நியருக்குப் பணிந்து வாழும் வாழ்க்கையை அவன் வெறுக்க வேண்டும். சுவாமி இந்த வரந்தான் தங்களிடம் கேட்கிறேன். தருவீர்களா?'' என்றான் பார்த்திபன்.



**அளவுக் கடங்காத, ஆழங்காண முடியாத ஆச்சர்யத்தினால் அவனுடைய ஒளியிழந்த கண்கள் விரிந்தன.**

சக்தியற்ற அவனது உடம்பில் இவ்வளவு ஆவேசமாகப் பேசும் வலிமை அப்போது எப்படித்தான் வந்ததோ, தெரியாது. சிவனடியார் சாந்தமான குரலில், ''பார்த்திபா! உன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றுவேன் நான் உயிரோடிருந்தால்'' என்றார்.

பார்த்திபன், ''என் பாக்கியமே பாக்கியம்! இனி எனக்கு ஒரு மனக்குறையுமில்லை. ஆனால், ஆனால் தாங்கள் யார், சுவாமி! நான் அல்லும் பகலும் வழிபட்ட சிவபெருமான்தானோ? ஆகா! தங்கள் முகத்தில் அபூர்வ தேஜஸ் ஜொலிக்கிறதே! எங்கள் குலதெய்வமான ஸ்ரீ ரங்கநாதனேதான் ஒருவேளை இந்த உருவெடுத்து...'' என்பதற்குள், சிவனடியார், ''இல்லை, பார்த்திபா! இல்லை. அப்படியெல்லாம் தெய்வ நிந்தனை செய்யாதே!'' என்று அவனை நிறுத்தினார். பிறகு அவர், ''நானும் உன்னைப்போல் அற்ப ஆயுளையுடைய மனிதன்தான். நான் யாரென்று உனக்கு அவசியம் தெரிந்துகொள்ள வேண்டுமா? அப்படியானால், இதோ பார்!'' என்று சொல்லி, தம் தலை மீதிருந்த ஜடாமுடியையும் முகத்தை மறைத்த தாடி மீசையையும் லேசாகக் கையிலெடுத்தார்.

கண் கூசும்படியான தேஜஸுடன் விளங்கிய அவருடைய திவ்ய முகத்தைப் பார்த்திபன் கண்கொட்டாமல் பார்த்தான்.

''ஆகா தாங்களா?'' என்ற மொழிகள் அவன் வாயிலிருந்து குமுறிக்கொண்டு வந்தன.

அளவுக்கடங்காத, ஆழங்காண முடியாத ஆச்சரியத்தினால் அவனுடைய ஒளியிழந்த கண்கள் விரிந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தக் கண்கள் மூடிவிட்டன; பார்த்திபனுடைய ஆன்மா அந்தப் பூத உடலாகிய சிறையிலிருந்து விடுதலையடைந்து சென்றது.

(தொடரும்)

சுகந்தி ஜி.பாரதி

# புன்னகைப் பூவே!



என் மௌனத்தைக்
கலைக்க
ஏதேதோ செய்கிறாய்

நான் விரும்பும்
கவிதையைக்
கத்திக் கத்திப் படிக்கிறாய்

பிடித்த உணவை
முன்னே நீட்டிச்
சலனப்படுத்துகிறாய்







இரவின்
தனிமையைச்
சுட்டிக் காட்டி
வம்புக்கிழுக்கிறாய்

நிலவொளி
மயக்குமென
ஜன்னல்களைத்
திறந்துவிடுகிறாய்

தெரியவே இல்லை
உனக்கு

எளிமையானதொரு
புன்னகை ஏந்தி
என்னை
ஜெயிக்க!



ஆயிரக்கணக்கான இந்தியப் பெண்களின் ரோல் மாடல் கிரண் பேடி. இந்தியக் காவல் துறையில் காலடி வைத்த முதல் பெண்மணி. இந்தாண்டு டெல்லியின் போலீஸ் ஹைற கமிஷனராக நியமிக்கப்படுவார் எனப் பலரும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த வேளையில், அவருக்கு இரண்டு வருடங்கள் ஜூனியரான வொய்.எஸ்.தத்வாலுக்கு அந்தப் பதவி கொடுக்கப்பட்டுள்ளது. அனைத்துத் தகுதிகளும் இருந்த பொழுதும் அந்தப் பதவி தமக்கு மறுக்கப்பட்டது மிகப்பெரிய அநீதி என முழக்கமிட்ட கிரண் பேடியைச் சந்தித்துப் பேசினோம்.



**இந்தியாவின் குடியரசுத் தலைவராக முதன்முதலாக ஒரு பெண்மணி பதவியேற்ற அதே தினத்தில் இந்தியத் தலைநகரின் முதல் பெண் போலீஸ் கமிஷனராக வரக்கூடிய வாய்ப்பு உங்களுக்கு மறுக்கப்பட்டதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

''இது இரண்டுமே அவர்களது முடிவு. டெல்லி போலீஸ் கமிஷனராக நான் நியமிக்கப்படாதது நியாயமற்ற செயல். ஆனால், அவர்களுக்கு அது நியாயமான செயலாக இருக்கலாம்.''

**'எனக்கு நேர்ந்த இந்த அநீதிக்கு நியாயம் கிடைக்கும் வரை ஓய மாட்டேன்' என்று சொல்லி மூன்று மாத விடுமுறையில் சென்றீர்கள். திடீரென்று ரத்து செய்துவிட்டு பணிக்குத் திரும்பியது ஏன்?**

''உள்துறை அமைச்சர் சிவராஜ் பாட்டீலைச் சந்தித்துப் பேசினேன். அது மிகவும் நேர்மையான, உபயோகமான சந்திப்பாக இருந்தது. அதன் பின் என் வேலையைத் தொடர முடிவு செய்துவிட்டேன். விடுப்பு எடுத்துக்கொண்டு என் நேரத்தைப் போக்கிக்கொள்ள நான் விரும்பவில்லை. எனக்களிக்கப்பட்ட இந்தப் பணியில் நான் மேற்கொள்ள வேண்டிய செயல்கள் எவ்வளவோ இருக்கின்றன. அதைச் செவ்வனே செய்து முடிக்க வேண்டியது என் கடமை.''

**'நான் இரவு நேர பார்ட்டிகளுக்கும் மற்றைய கேளிக்கைகளுக்கும் போகவில்லை. அதனால்தான் எனக்கு இந்தப் பதவி கொடுக்கப்படவில்லை' என சில ஊடகங்களுக்குப் பேட்டி**

"அரசியலைப் பற்றி யோசிக்கவில்லை. ஆனால், மக்கள் பணி என்பது என் இறுதி மூச்சு உள்ளவரை தொடர்ந்துகொண்டே இருக்கும்"

**அளித்திருந்தீர்களே?**

''அந்தச் சமயத்தில் அப்படிக் கூற வேண்டும்போல இருந்தது; கூறினேன். எனக்கு நானே சில ஆரோக்கியமான பழக்க வழக்கங்களை வைத்துக் கொண்டிருக்கிறேன். என் வேலைக்கென ஒரு நேரம், என் குடும்பத்தினருடன் செலவழிக்க ஒரு நேரம் என வகுத்துக் கொண்டிருக்கின்றேன். என்றுமே நேர்மைதான் வெற்றி பெறும்.''

**திஹார் ஜெயிலில் உங்களுக்கு ஒரு 'punishment posting' வழங்கப்பட்டது. அதை ஒரு 'positive posting' ஆக மாற்றிச் சாதித்துக் காட்டினீர்கள். இன்றைய திஹார் ஜெயில் எப்படி இருக்கிறது? நீங்கள் கொண்டு வந்த பல நலத்திட்டங்கள் அங்கே இன்னும் செயல்பட்டு வருகின்றனவா?**

''திஹார் போஸ்டிங் என்பதை நான் ப்ரொடக்டிவ் போஸ்டிங்காகத்தான் எடுத்துக்கொண்டேன். நான் அங்கே இன்ஸ்பெக்டர் ஜெனரலாக இருந்த காலத்தில், நான்கு செல்கள் மட்டுமே இருந்தன. அந்த நான்கு செல்களில் 10,000 சிறைவாசிகள் இருந்தனர். இப்பொழுது

# "உள்துறை அமைச்சரால் வேலைக்குத் திரும்பினேன்!"

ஒன்பது செல்கள் வந்துவிட்டன. சிறைக் கைதிகளை இந்தச் சமுதாயம் பார்க்கும் கண்ணோட்டத்தை மாற்ற அங்கே விபாஸனா தியான முறை மற்றும் அவர்களுக்குப் படிப்பறிவையும், வேலை வாய்ப்பையும் வழங்கப் பல்வேறு நலத் திட்டங்களையும் கொண்டு வந்தேன். நான் அங்கே கொண்டு வந்தவற்றில் சில தொடர்கின்றன, சில விட்டுப்போய்விட்டன. சில புதிய திட்டங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன.''

**அரசியலுக்கு வரும் எண்ணமுண்டா?**

''நான் எப்பொழுதுமே நாளையைப் பற்றிச் சிந்திப்பது இல்லை. நாளை என்பது நம் கையில் இல்லை. இன்றைய நாள் மட்டும்தான் நம்முடையது. அதனால் அரசியலைப் பற்றி யோசிக்கவில்லை. ஆனால், மக்கள் பணி என்பது என் இறுதி மூச்சு உள்ளவரை தொடர்ந்துகொண்டே இருக்கும். அது பெண்கள் முன்னேற்றம் பற்றியோ அல்லது காவல் துறையை மேலும் மேம்படுத்துவது பற்றியோ ஏதோ ஒரு வகையில் இருக்கலாம். அதற்கான தளம் அரசியலா என்பது தெரியாது.''

**பெண்களுக்கு நீங்கள் கூற விரும்புவது...?**

''என்றுமே வெற்றியாளர்களாகத் திகழுங்கள். உங்களுக்கு நீங்களே கல்வி புகட்டிக்கொள்ளுங்கள். உங்களிடம் தேங்கிக் கிடக்கும் சக்தியை உணர்ந்து கொள்ளுங்கள். உங்கள் சொந்தக் காலில் நில்லுங்கள். யாரிடமும் எதையும் எதிர்பார்க்காதீர்கள். உங்கள் கைகள் எப்பொழுதுமே பிறருக்குக் கொடுக்கும் கைகளாக இருக்கட்டும். பிறரிடமிருந்து கை நீட்டி வாங்கும் கையாக இருக்கக் கூடாது. நீங்கள் ஒரு அன்னையாக இருந்தால் உங்கள் பிள்ளைக்கும் பெண்ணுக்கும் ஒரே மாதிரியான கல்விச் செல்வத்தைக் கொடுங்கள்.''

**- நளினி சம்பத்குமார்**

படம்: **எஸ்.சம்பத்குமார்**

## மனம் திறக்கிறார் கிரண்பேடி

# எதற்கும் தகுதியற்றவர்கள்!

துவாரகையில் இடையர் குலத்தில் பிறந்த மாயக்காரன் கண்ணன். அவன் நமக்கு வெகு தூரத்தில் இருப்பவனா எனில், ஆம். கிட்டத்தில் இருப்பவனா, ஆம். மிகப் பெரியவனா, ஆம். சிறுவனா, ஆம்! அவன் அன்று யுத்தத்தின் நடுவில் ஓதிய கீதையை கற்காதவர்கள் உலகத்தில் ஞானமற்ற அந்நியர்கள்.

நான்முகன் திருவந்தாதியில், திருமழிசை ஆழ்வாரின் இந்த வெண்பாவில் மூன்று அழகிய தமிழ் வார்த்தைகளைத் தெரிந்துகொள்ளலாம். சேயன் என்றால் தூரத்தில் இருப்பவன், அணியன் - கிட்டத்தில் இருப்பவன், ஏதிலர் என்றால் அந்நியர்கள்.

'ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின்' என்று வள்ளுவர் சொல்லும் 'மற்றவர்கள்'. இம்மூன்று சொற்களில் அணியன் என்ற சொல் தற்போது மலையாளத்திலும் வழக்கத்தில் இருக்கிறது, கையாள் என்கிற அர்த்தத்தில்.

பகவான் நம் கையாளாக இருந்தால் எதைப் பற்றியும் கவலைப்பட வேண்டியதில்லை.

இப்போது பாடலைப் பார்ப்போம்.

***'சேயன், அணியன், சிறியன், மிகப்பெரியவன்,***
***ஆயன், துவரைக்கோனாய் நின்ற மாயன் - அன்று***
***ஓதிய வாக்(கு) அதனைக் கல்லார், உலகத்தில்***
***ஏதிலர் ஆம், மெய்ஞ் ஞானம் இல்'***

(துவரை என்று துவாரகையை தமிழ்ப்படுத்தியிருக்கிறார் ஆழ்வார். அவர் வாக்கு என்று சொல்வது பகவத்கீதையை. அதைக் கற்காதவர்கள் உலகத்தில் எதற்கும் தகுதியில்லாதவர்கள்)

**(படிக்கலாம்)**

**சுஜாதா**





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் **"ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்"** தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

**ப**தினெட்டு வருடங்கள்... நாற்பது படங்கள் என்று பலமான அனுபவத்துக்குச் சொந்தக்காரர். இவருக்குப் பின் வந்த பல டைரக்டர்கள் இன்று இருக்குமிடம் தெரியாமல் இருக்க, இன்றும் ஹீரோக்களால் விரும்பப்படும் இயக்குநராக வலம் வருகிறார் சுரேஷ் கிருஷ்ணா. மழை நேரத்து மாலை நேரமொன்றில் தமது அனுபவங்களை நம்மிடம் பகிர்ந்துகொண்டார்.



"சினிமாவுக்கு வந்து பேரெடுக்கணும், சம்பாதிக்கணும்ங்கறது என்னைக்குமே என் லட்சியமா இருந்ததில்ல. நான் உதவி இயக்குநரா பாலசந்தர் சார்கிட்ட சேர்ந்ததுலேர்ந்து எல்லாமே யதேச்சையா நிகழ்ந்த விஷயங்கள். இன்றைய பொழுதை சந்தோஷமா கழிக்கணும். நாளையை அவன் பார்த்துப்பான்'' என்று மேலே கை காட்டுகிறார்.

**கமல், ரஜினியால விரும்பப்படுற இயக்குநரா நீங்க இருக்கறதுக்கு என்ன காரணம்?**

"அடிப்படைல ரெண்டு பேருமே எனக்கு நல்ல நண்பர்கள். கமல் சாரால 'சத்யா'ல அறிமுகப்படுத்தப்பட்டவன் நான். ரஜினி சாரோட 'வீரா', 'அண்ணாமலை', 'பாட்ஷா'ல்லாம் எனக்கு மிகப்பெரிய திருப்புமுனையைத் தந்த படங்கள். எங்களுக்குள்ள நல்ல புரிதல் இருக்கு. இன்னொன்னு, அனாவசியமா அடுத்தவங்க விஷயத்துல மூக்கை நுழைக்க மாட்டோம். கற்பு மாதிரி நட்பை பாதுகாப்போம், போதாதா?''

**கமல், ரஜினி... சிறந்த நடிகர்னு யாரைச் சொல்வீங்க?**

"ரெண்டு பேருமே தமிழ் சினிமாவோட ரெண்டு கண்கள்னா அது மிகையாகாது. அற்புதமான நடிகர்கள். என்னைக் கேட்டா, ரெண்டு பேரையும் ஒப்பிட்டுப் பேசவே கூடாது. அவங்க கடந்த வந்த பாதை சாதாரணமானது இல்ல. கஷ்டங்கள், வெற்றிகள் எல்லாத்துக்கும் பின்னாடி தனி வரலாறே இருக்கு. அவங்களோட பங்களிப்பு தமிழ் சினிமாவுக்கு என்னென்னைக்கும் தேவை. இதை மக்களும் உணர்ந்தே இருக்காங்க!''

**தமிழ், தெலுங்குல முன்னணி ஹீரோக்கள் பலரோடவும் வேலை செஞ்சிருக்கீங்க... எப்படி உணர்றீங்க?**

"எல்லோருமே வெற்றிக்காக ரொம்ப உழைக்கறாங்க. அடுத்து அதைத் தக்க வச்சுக்க கடினமா போராடுறாங்க. வெளிலதான் ஹீரோக்கள் அப்படி இப்படின்னு பேசிக்கறாங்க. கூடவே இருந்து பார்க்கறவங்களுக்குத்தான் தெரியும் அவங்களோட துடிப்பு பத்தி. சின்னவங்கலேர்ந்து பெரிய ஹீரோக்கள் வரை இங்க வெற்றி தேவைப்படுது. அதை



நோக்கித்தான் ஓடுறாங்க. ஓர் இயக்குநரா என்னோட பங்களிப்பு எப்பவும் அவங்களுக்குச் சிறப்பானதா இருக்கும்.''

**ஆளவந்தான், பாட்ஷா மாதிரி பிரமாண்டமான படமும் பண்றீங்க.. சங்கமம், ஆஹா மாதிரி பட்ஜெட் படங்களும் பண்றீங்க... எது உங்க உண்மையான முகம்?**

"ரெண்டும்தான். படம் மக்களுக்குப் பிடிக்கணும், தயாரிப்பாளர்ல ஆரம்பிச்சு எல்லாருக்கும் பலன் இருக்கணும், அடுத்த படம் பண்ண உத்வேகம் தரணும். இதுதான் ஒரு படம் பண்ணும்போது நான் மனசுல நினைக்கற விஷயங்கள். சின்ன படமா, பெரிய படமான்னு பார்க்கறதில்ல. ரொம்ப உண்மையான முகம் பத்திச் சொல்ல

# ரஜினி... கமல்... சிறந்த நடிகர் யார்?

ணும்னா, படம் வெளியாகி ஹிட்டுன்னு கேள்விப்படறப்போ சந்தோஷம் கொப்பளிக்குதே அதுதான்.''

**பழைய படங்களை ரீமேக் பண்றதை ஓர் இயக்குநரா நீங்க வரவேற்குறீங்களா?**

''இது சில நேரத்துல சரியா வரும், சில நேரத்துல சரியா வராது. பாலசந்தரோட 'நான் அவன் இல்லை' ரீமேக்காகி நல்லா போச்சு. ஆனா இந்தில அமிதாப்போட 'டான்' ஷாருக் பண்ணி நல்லா போகல. ஆனா இதை மட்டும் வச்சு நாம ஒரு முடிவுக்கு வர முடியாது. தமிழ்ல கூட அடுத்தடுத்து பல படங்கள் வரப் போகுது. பொறுத்திருந்து பார்ப்போம்.''

**உங்க பார்வையில நல்ல சினிமான்னா எது?**

''மக்களால் விரும்பப்படுற எல்லாமே நல்ல சினிமாதான். பாட்ஷாவும் நல்ல படைப்புதான் 'மொழி'யும் நல்ல படைப்புதான். சினிமான்றதே ஒரு பொழுதுபோக்கு அம்சம்தானே... மூணு மணி நேரம் ரசிகனை கட்டிப்போட்டு ஒன்ற வைக்கணும். அவன் உங்ககூட பயணம் செஞ்சுட்டா நீங்கதான் மக்கள் பல்ஸ் தெரிஞ்ச டைரக்டர். நல்ல சினிமா எடுக்கத் தெரிஞ்ச படைப்பாளி.''

**'பாட்ஷா' எடுத்த நீங்கதான் 'பாபா'வும் கொடுத்தீங்க... எங்க மிஸ்ஸாச்சு?**

''பாபாவுக்கு பலம், பலவீனம் ரெண்டுமாவும் அமைஞ்சது மீடியாதான். 'பாபா'ன்னு டைட்டில் ரிலீஸ் பண்ண உடனே ஆரம்பிச்ச அவங்களோட யூகங்கள், ஆகாயம் தாண்டியும் எழுதப்பட்டது. கதை, காஸ்ட்யூம், பன்ச் டயலாக், லொகேஷன்னு இண்டு இடுக்கு விடாம கற்பனையைக் கொட்டினாங்க. மக்கள்கிட்ட எதிர்பார்ப்பு எகிறிடுச்சு. ஆனா நாங்க மொதல்லயே முடிவு பண்ண ஒரு விஷயம், ரஜினியை இந்தப் படத்துல வித்தியாசமா காட்டணும்ங்கறது. இவங்க வழக்கமான ஃபார்முலால எதிர்பார்த்தாங்க. ஒண்ணுக்கொண்ணு அலைவரிசை ஒத்துப்போகாம படம் சரியா போகல. ஆனா ஒரு இயக்குநரா 'பாபா'வை நான் விரும்பிப் பண்ணேன். ரஜினி சாருக்குமே ரொம்பப் பிடிச்ச படம்.''

படம் : சுந்தரம்



**தமிழ் சினிமாவோட இன்றைய ட்ரெண்ட் எப்படியிருக்கு?**

''அருமையா இருக்கு. மக்கள் நல்ல ரசனைக்கு மாறிட்டு வர்றாங்க. காதல், மொழி, பருத்தி வீரன்னு யதார்த்த வாசம் தமிழ் சினிமா முழுக்கத் தவழணும். அதே நேரத்துல ஃபேண்டஸியான படங்களும் ஜெயிக்கணும். ஒரு 'சிவாஜி' வந்து ஜெயிச்சா, 'வெயில்' மாதிரி படத்தையும் ஓட வைக்கணும். அதிரடியும் வேணும் அமைதியும் வேணும். எல்லாமே கரெக்டா கலந்த நல்ல ஃபார்முலாவா தமிழ் சினிமா மிளிரணும்.''

– மு.மாறன்

# தண்ணீரே...

"கொல்லிமலை அன்னாசிக்கு ஈடா வேற எந்த ஊரு அன்னாசியும் இருக்க முடியாது. சூப்பர் சுவை மட்டுமல்ல... இவன் விவசாயிக்குத் தொல்லை தராத நல்ல பிள்ளையும்கூட'' என்று எடுத்த எடுப்பிலேயே புகழ்ந்து தள்ளுகிறார் துரைசாமி. கொத்துக் கொத்தாய் கொல்லிமலையில் விளையும் அன்னாசி பற்றிப் பேச்செடுத்தாலே அண்ணாச்சி குதூகலமடைகிறார்.

"கொல்லிமலை குண்டூர் நாடு பஞ்சாயத்துக்குட்பட்ட மலைக் கிராமங்கள்ல மட்டும்தான் வெகு அளவுல பயிராகுது அன்னாசி. சும்மா இல்ல... ஐந்தாயிரம் ஏக்கர்ல விளையுது. தமிழ்நாட்ல எடுத்துக்கிட்டா, மொத்த விளைச்சல் தொண்ணூறு சதம் கொல்லிமலைதான் கொடுக்குது'' என்கிறார். இவர் கருத்தமணிப்பட்டி கிராமத்தில் மூன்று ஏக்கரில் அன்னாசி பயிரிட்டிருக்கிறார்.



* துரைசாமி

## – தங்கமான விவசாயம்

"இங்கு விளையறது மொரீசியஸ் ரக அன்னாசி. மூன்று வகையான நாற்று மூலமா அன்னாசிப் பயிரிடலாம். பழத்தின் நுனி மீதுள்ள கொண்டை ஒரு வகை நாற்று. பழத்தின் அடிப்பகுதியில் உள்ள ஸ்லிப்ஸ்"ங்கறது இன்னொரு வகை நாற்று. நிலத்திலிருந்து தாய்ச்செடி மூலமா கிளைச்சு வர்றது இடைக்கன்று நாற்று. இதுல அதிகளவுல பயன்பாட்டுல இருக்கறது இடைக்கன்று நாற்றுதான். செம்மேடு, பரசோலை போன்ற இடங்கள்ல உள்ள தோட்டக்கலைப் பண்ணைகள்ல உற்பத்தி செய்து விவசாயிகளுக்குத் தர்றோம். மலைவாழ் விவசாயிகளுக்கு, ஒருங்கிணைந்த பழங்குடியினர் மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் எழுபத்தைந்து சதவிகித மான்ய விலையில் இடைக்கன்றுகள் தரப்படுது. மலைவாழ் அல்லாத விவசாயிகளுக்கு ஐம்பது சதவிகித மான்ய விலையில் தர்றோம்'' என்கிறார் கொல்லிமலை தோட்டக்கலை அலுவலர் ஆர்.கதிரவன்.

கடல் மட்டத்திலிருந்து குறைந்தபட்சம் எண்ணூறு மீட்டர் உயரத்தில், மலைப் பிரதேசங்களில் நன்கு செழித்து வளரக்கூடியது அன்னாசி. கொல்லிமலையில் சுமார் மூவாயிரம் அடி உயரப் பகுதிகளுக்கு மேலே இது பயிர் செய்யப்படுகிறது.

ஒரு ஏக்கருக்கு ஏழாயிரம் கன்றுகள். இவற்றில் ஐந்தாயிரம் கன்றுகள் நிச்சயம்

# ...தேவையில்லை!

பலன் தரும் என்று சொல்லப்படுகிறது. வைகாசி, ஆனி, ஆடி என மூன்று மாதங்களில் கன்றுகள் நடலாம்.

கன்றுகள் நட்ட இரண்டு வருடம் கழித்தே பலன் தருகிறது அன்னாசி. ஆறு மாதத்துக்கு ஒருமுறை மட்டுமே களையெடுக்க வேண்டும். விவசாயிக்கு வேலை அதிகம் வைக்காத சாகுபடிப் பயிர். உரம் வைக்கத் தேவையில்லை; வைப்பதுமில்லை. விருப்பப்பட்டால் இயற்கை உரம் மட்டும் இடப்படுவதுண்டு. இன்னொரு பெரிய சௌகரியம், தண்ணீர் பாய்ச்ச வேண்டியதே இல்லை.

''வருடத்துக்கு ஒரு முறை மட்டுமே அறுவடை. ஒரு செடியில ஆண்டுக்கு ஒரு அன்னாசிப் பழம்தான் விளையும். ஏழு வருஷம் கழிச்சு மாற்றுப் பயிர் சாகுபடி செய்துவிட்டுப் பின்னர், மீண்டும் அன்னாசிக்கே வந்துவிடலாம்.

எங்க தாத்தா காலத்துலேர்ந்து அன்னாசிப் பயிரிட்டுட்டு வர்றோம். இங்கிருந்து மும்பை, பெங்களூர், சென்னை, திருச்சி போன்ற இடங்களுக்கு மொத்தமா கொள்முதல் செஞ்சுட்டுப் போறாங்க. வருஷத்துக்கு ஏக்கருக்கு இருபதாயிரம் ரூபாய் லாபம் கிடைக்கும். மற்ற பணப் பயிரைவிட லாபம் கொஞ்சம் கம்மிதான்னாலும் கொல்லிமலை அன்னாசியை விட்டுடக் கூடாதுன்னு பயிர் செஞ்சுட்டு வர்றோம்.



✱ கதிரவன்

கொல்லிமலையில நிலவுற சமச்சீரான சீதோஷ்ணம், ஈரப்பதமான காற்று, சற்றே அமிலத்தன்மை கொண்ட மண்வளம்... இதுங்க எல்லாம் சேர்ந்துதான் கொல்லிமலை அன்னாசிக்கு அற்புதமான ருசியை அள்ளி அள்ளித் தந்துக்கிட்டே இருக்கு!'' என்கிறார் துரைசாமி.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



## பரிசு ரூபாய் 10 லட்சம்!

நடனத்தை மையமாக வைத்து நடத்தப்படும் நிகழ்ச்சி எல்லா சேனல்களிலும் முக்கிய இடத்தைப் பிடித்திருக்கும் நிலையில், சன் டி.வி.யில் 'மஸ்தானா மஸ்தானா' ப்ரோகிராம் ஜெகஜ்ஜோதியாகத் தொடங்கியிருக்கிறது.

''சின்னத்திரை தொடர்கள் மூலமா மக்கள் மனம் கவர்ந்த நடிகர் - நடிகைகள், எங்களோட இந்த நடனப் போட்டியில கலந்துக்கிட்டு அவங்களோட இன்னொரு பக்கத்தை வெளிப்படுத்தப் போறாங்க. பல சுற்றுகளா நடைபெறப் போகும் இந்தப் போட்டியில் நடனத்திறன், அழகு, உடை அலங்காரம், முக பாவனை உள்ளிட்ட பல்வேறு அம்சங்களும், உரிய நடுவர்களால் அலசப்பட்டு, சிறந்த நடன ஜோடி தேர்ந்தெடுக்கப்படு வாங்க. நேயர்களும் தங்களுக்குப் பிடித்த ஜோடியை வோட்டளித்துத் தேர்ந்தெடுக்கலாம். வெற்றி பெற்றவர்களுக்கு மிஸ் மற்றும் மிஸ்டர் மஸ்தானா பட்டம் வழங்கப்படுவதோடு, ரொக்கப் பரிசா ரூ.10 லட்சம் தரப்படும்'' என்று சந்தோஷம் கொப்பளிக்கச் சொல்கிறார் இந் நிகழ்ச்சியின் இயக்குநர் ஷிரான் மேதர்.

'மஸ்தானா மஸ்தானா' ஒவ்வொரு ஞாயிறு இரவு ஏழு மணி முதல் எட்டு வரை சன் டி.வி.யில் ஒளிப்பரப்பாகிறது.

- ஷோபனா



# 6 அதிர்ந்து

**ப**ளிங்குக் கற்கள் பதிக்கப்பட்டுள்ள பிரம்ம சரோவர் கரையைச் சுற்றிலும் காட்சியளித்த கர்ணன், பீஷ்மர், நவதுர்க்கை, சப்தரிஷி ஆகியோரின் உருவங்களைக் கண்டு களித்தோம்.

"பிரம்ம சரோவரின் வடக்குக் கரையில் தரிசிக்க வேண்டிய பல இடங்கள் உண்டு. ஒவ்வொன்றாய்ப் பார்ப்போம்" என்றபடி வேகமாக நடக்கத் தொடங்கினார் ராமநாதன்.

நாங்கள் முதலில் நுழைந்த இடம் ஒரு பெரிய கோட்டைபோலக் காட்சியளித்தது. அது பாபா ஷ்ரவண்நாத் என்பவரால் பதினேழாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதாம். அதில் பாண்டவர்களின் உருவங்கள் உள்ளன.

அடுத்ததாக நாங்கள் சென்றது ஜெய்ராம் ஆஷ்ரமத்துக்கு. ஜெய்ராம் வித்யாபீடத்தின் சீடரான தேவேந்திர ஸ்வரூப் பிரம்மச்சாரி என்பவரால் 1973-ல் எழுப்பப்பட்டது இது. நுழைந்தவுடன் அற்புதமான இரு சிற்பங்கள். அம்புப் படுக்கையில் பீஷ்மரும், முதிய வேடத்தில் வந்த கண்ணனிடம் தன் தர்மத்தையே தானம் செய்யும் கர்ணனுமாக வெள்ளைக் கல்லில் அற்புதமாக வடிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆசிரமத்துக்குள் பலவித சலவைக் கல் சிற்பங்கள்- கண்ணனின் திருவுருவங்கள்.

ஜெய்ராம் வித்யாபீடம் என்கிற வேத பாடசாலை ஒரு சிறு அருங்காட்சியகத்தை நிறுவியிருக்கிறது. சற்றே கீழ்ப் பகுதியில் உள்ள குகை போன்ற அமைப்பில் பல மகாபாரதக் காட்சிகள் வடிவமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு காட்சியமைப்பிலும் சில பாத்திரங்களின் உடல் பகுதிகள் அசைவது உயிரோட்டமாக இருந்தது.

பிரம்ம சரோவரின் வடகரையில் கௌடியா மடமும் உள்ளது. இவர்கள் சைதன்ய மகாபிரபு பரம்பரையினர். திருமாலின் அவதாரமாகவே கருதப்படுபவர் சைதன்யர். கோரங்க மகாபிரபு என்றும் இவரை அழைப்பதுண்டு. பஜனை சம்பிரதாயத்துக்கு பெரும் உத்வேகம் கொடுத்தவர்.

சேத் ஜுகல் கிஷோர் பிர்லா என்பவரால் கட்டப்பட்ட ஒரு கோயிலும் பிரம்ம சரோவரின் வடகரையில் இருக்கிறது. பகவத் கீதா மந்திர் என்கிறார்கள். இங்கு 'கஜ்கண்டா' என்ற பெயரில் ஒரு பெரிய கண்டாமணி காட்சி தருகிறது. வெள்ளை சலவைக் கல்லினால் ஆனது.

"மகாபாரத காலத்தில் இந்தப் பகுதியில் வசித்த டுடு என்ற ஒரு பறவையின் முட்டைகள் அப்போதுதான் உடைந்து குஞ்சுகள் வெளிவரத் தொடங்கியிருந்தன. அடுத்த நாளிலிருந்து பாரதப் போர் அங்குதான்

நடைபெறப் போகிறது என்பதைக் கேள்விப் பட்டதும் அந்தப் பறவை நடுங்கியது. தனது குழந்தைகளின் பாதுகாப்புக்காக இறைவனை இறைஞ்சியது. இறைவன் அதற்கு அருளும்

விழுந்ததற்கு அடையாளமாக வலக்கால் சல வைக் கல் உருவமாகச் செதுக்கப்பட்டி ருக்கிறது.

பிரம்ம சரோவருக்கும் சன்னிஹித் சரோ வருக்கும் நடுவே உள்ளது ஸ்ரீகிருஷ்ணா சங்கிரஹாலயா (அருங்காட்சியகம்). மூன்று

# நடுங்கும் பூமி!

வகையில் அங்கிருந்த யானை ஒன்றின் கழுத்தில் பொருத்தப்பட்டிருந்த பெரிய மணி ஒன்றை அந்தக் குஞ்சுகள் இருந்த பகுதியில் விழச் செய்தார். பாரதப் போர் நடைபெற்ற பதினெட்டு நாட்களும் அந்த மணியினுள்ளே பறவைகள் பாது காப்பாக இருந்தன. இதற்கு அடை யாளமாகத்தான் இந்த மணியை வடித்தி ருக்கிறார்கள்'' என்று விளக்கம் அளித்தார் ராமநாதன். ஆலய வளாகத்தில் வெள்ளைத் தேர் ஒன்றும் காணப்பட்டது.



"அடுத்ததாக என்ன? குளமா, கோயிலா?'' என்று கேட்டான் ஜருகண்டி.

''ஹரியானாவில் உள்ள ஒரே சித்த பீடம் குருக்ஷேத்ரத்திலுள்ள பத்ரகாளி கோயில்தான். அது ஜான்சா சாலையில் இருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணர் தன் தலையை மழித்துக் கொண்டது இங்குதான் என்கிறார்கள். இங் குள்ள காளி தேவியிடம் போருக்கு முன் பாண்டவர்கள் வெற்றிக்கு வேண்டிக் கொண் டனராம். இப்போது அங்கே போகி றோம்''என்றார் ராமநாதன்.

அப்படிப் போகும்போதே அந்த ஆல யத்தின் மற்றொரு மகிமையையும் விளக்கி னார். தட்ச யாகத்தின்போது தந்தையின் கடுசொல் பொறுக்காமல் சக்தி யாககுண் டத்தில் விழ, அம்மனின் உருவத்தை சிவ பெருமான் தன் கரங்களில் தூக்கி ஆட, அவ ரது உக்கிரத்தைத் தணிக்க திருமால் தனது சக்கரத்தால் அவ்வுடலைத் துண்டுகளாக்கி னாராம். அப்படி விழுந்த 51 துண்டுகளில் சக்தியின் வலக்கால் குருக்ஷேத்ரப் பகுதியில்

அருண சரண்யா

கட்டடங்களாக அமைந்த இதில் கண்ண னையும் பாரதப் போரையும் சித்திரிக்கும் சிற்பங்களும் ஓவியங்களும் ஏராளம்.

பின்னர், குருக்ஷேத்ரா ரயில் நிலையத் துக்கு அருகே உள்ள ஸ்ரீநாத் மந்திருக்கு எங்களை அழைத்துச் சென்றார் ராமநாதன். ஒரு பிரம்மாண்டமான (பன்னிரண்டு அடி உயரம்) பஞ்சமுக ஹனுமான் காட்சி

தருகிறார். "இங்கு செவ்வாய்க்கிழமைகளில் ரொம்ப விசேஷம்" என்றார். மூடிய வாயுடன் சாந்தமாக ஒரு முகம், பற்களைத் திறந்து காட்டியபடி சிரிப்பதுபோன்ற ஒரு முகம், கிளிபோன்ற நாசிகொண்ட ஒரு முகம், வராகம் போலக் காட்சி தரும் இரு முகங்கள் என்று காட்சியளித்தார் பஞ்சமுக ஆஞ்சநேயர்.

பொதுவாகவே குருக்ஷேத்ரம் வளமான விவசாயப் பகுதியாகக் காணப்பட்டது. மூன்று போக விளைச்சல். சமீபகாலமாக சிறுதொழில்களும் தொடங்கப்பட்டுள்ளன.

குருக்ஷேத்ரத்தில் அசைவ ஹோட்டல்கள் கிடையாது. பச்சை இறைச்சியும் விற்கப் படாது. முட்டைகள்கூட கடைகளில் விற்




பதில்லை. தள்ளு வண்டிகளில் மட்டும் விற்கப்படுகின்றன.

"இன்று திங்கட்கிழமையும் இல்லை. அமாவாசையும் இல்லை. ஜுலை, ஆகஸ்ட் மாதமும் இல்லை" என்று திடீரென்று ராமநாதன் கூறவும் திகைப்பாக இருந்தது. அடுத்த நிமிடமே அந்தப் புதிர் அவிழ்ந்தது.

"அப்படியிருந்தால் ஃபல்குவுக்கு உங்களை அழைத்துச் சென்றிருப்பேன். இங்கிருந்து சுமார் முப்பது கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது ஃபல்கு" என்ற ராமநாதன், "இப்போது உங்களுக்கு கயாசுரன் கதையை நான் சொல்லப் போகிறேன்" என்றார். அப்படிச் சொல்லி முடித்ததுமே ஜருகண்டியின் முகத்தில் ஒரு புன்னகை தோன்றி வேகமாக மறைந்ததையும் கவனித்தார்.

"எதற்குச் சிரித்தாய்?" என்று கேட்டார்.

"நிறைய அசுரர்கள் கதைகளைக் கேட்டாச்சு. ராட்சத வேந்தனாகப்பட்டவன் கடும் தவம் செய்வான். அந்தத் தவத்தின் பலனாகப் பெற்ற வரத்தைக் கொண்டு தேவர்களைக் கொடுமைப்படுத்துவான். பிறகு கடவுள் வித்தியாசமான விதத்தில், அந்த வரம் கெடாத வகையில் அவனை வதம் செய்வார். இதுதானே கயாசுரனின் கதையும்?" என்றான் ஜருகண்டி.

"அதுதான் தப்பு. கயாசுரன் கதை ரொம்ப வித்தியாசமானது" என்று கூறத் தொடங்கினார் ராமநாதன்.

"பீகார் மாநிலத்தில் கயாசுரன் என்ற அரக்கன் வாழ்ந்து வந்தான். அவன் உடல் மிகப் பிரம்மாண்டமானது. தரையில்தான் படுத்துத் தூங்குவான். அவன் உறக்கத்தில் புரளும்போது பூமியே அதிர்ந்து நடுங்கும். பூமாதேவி துயரத்தோடு திருமாலை அணுகித் தம் கவலையைத் தெரிவித்தாள்.

கயாசுரனைச் சந்தித்த திருமால், "எதற்காகத் தூங்கும்போது நிலநடுக்கத்தை உண்டாக்குகிறாய்?" என்றார். பின் பூமாதேவியின் கவலையைத் தெரிவித்தார்.

"தூங்கும்போது புரள்வதற்கு நான் என்ன செய்ய முடியும்?" என்று பொறுப்பில்லாமல் அவன் பதில் சொல்லவில்லை. "இனி படுத்துக்கொள்ளும்போது என் உடலில் பாறையைக் கட்டிக் கொள்கிறேன். அப்போது என்னால் புரள முடியாமல் போகும்" என்றான். சொன்னதைச் செயலிலும் காட்டினான்.

மகிழ்ந்த விஷ்ணு, அவன் விரும்பும் ஒரு வரத்தைத் தருவதாகக் கூறினான். 'என் பெயர் இந்த உலகம் உள்ள அளவும் நீடிக்க வேண்டும்' என்றான். அந்த வரம் அருளப்பட்டது.

"அந்த அசுரனின் பெயரில் அமைந்த இடம்தான் கயா. அங்கு சிரார்த்தம் செய்தால் முன்னோர்கள் மோட்சம் அடைவார்கள் என்கிற அளவுக்குப் புண்ணியத்தலம்" என்று கூறினார் ராமநாதன்.

"ஃபல்கு எனப்படும் இந்த இடம் குருக்ஷேத்ரத்துக்கு அருகில் இருக்கிறது. இதற்கும் கயாவுக்கும் கயாசுரனுக்கும் என்ன சம்பந்தம்?" என்று என் மனதில் எழத் தொடங்கிய அதே கேள்வியைக் கேட்டான் ஜருகண்டி.

'**வ**ம்புச் சண்டை' படத்தில் கதகளி நடனக் கலைஞராக வரும் சத்யராஜ், அதே கெட்டப்பில் ஒரு சண்டைக் காட்சியிலும் நடித்திருக்கிறார். ''மேக்கப் போடுறதுக்காகவே கேரளா ஒத்தப் பாலத்துலருந்து நான்கு கதகளி நடனக் கலைஞர்களை ஐதராபாத் வரவழைச்சோம். மேக்கப் போட நான்கு மணி நேரம் ஆகும். ஆடாம, அசையாம படுத்திருக்கணும். ரொம்பச் சிரமமா இருக்கும். ஆனா இதுக்கெல்லாம் நிச்சயமா பலன் இருக்கும். 'பெரியார்' படத்துக்குப் பிறகு என்கிட்ட நிறைய மாற்றம் இருக்கு. வம்புச் சண்டை, ஒன்பது ரூபாய் நோட்டு மாதிரி நல்ல கதையம்சமுள்ள படங்கள்ல மட்டும்தான் பண்றேன். இனி இல்லை லொள்ளு-ஜொள்ளு'' என்கிறார் சத்யராஜ். பார்ப்போம்.

— பவானி



'அட அவசரக் குடுக் கையே' என்பது போல் அவனை ஒரு பார்வை பார்த்த ராம நாதன் தொடர்ந்தார். ''கயாசுரனுக்கு மூன்று பெண்கள். சோமா, கோமா, பூமா எனும் அந்த மூவரையும் ஒரு வீரன்தான் மணக்க வேண்டும் என்று எண்ணினான் அவன். எனவே 'என்னைப் போரில் வெல் பவனுக்கே என் மகள்களைத் திருமணம் செய்து வைப்பேன்' என்றான். ஆனால், கயாசுரனைப் போரில் வெல்வது ஒருபுற மிருக்க, அவனோடு போரிட முன்வரவே யாரும் தயாரில்லை. இடிந்து போய்விட்டான் கயாசுரன். இறைவனையும் முனிவர்களை யும் தஞ்சம் அடைந்தான்.

ஃபல்கு எனப்படும் முனிவர் ஒருவர் குருக்ஷேத்ரத்தினருகே தவம்செய்து கொண்டி ருந்தார் (ஃபல்கி என அழைக்கப்பட்டு வந்த அந்த ஊர், பின்னர் இவரது பெயரால் ஃபல்கு என அழைக்கப்படத் தொடங்கியது). கடவுள் அருளினால் அவருக்குப் பெரும் வலிமை சேர, கயாசுரனைப் போருக்கு அழைத்த அவர், அவனை வீழ்த்தினார். தன் தோல்விக்கு மனம் மகிழ்ந்த கயாசுரன், தன் மகள்களை ஃபல்கு முனிவருக்கு மணமுடித் தார்.

ஃபல்கி ஊர் மக்கள் 'எங்கள் ஊர் மாப்பிள்ளைக்கு என்ன வரதட்சணை கொடுக்கப்போகிறாய்?' என்று கேட்டனர். கயாவில் இருந்த தன் ராஜாங்கத்திலிருந்து எண்ணற்ற பொருள்களை வாரி எடுத்து வந்து ஃபல்கி மக்களுக்கு அளித்தான் கயாசுரன். அன்று சோமாவதி அமாவாசை (அதாவது திங்கட்கிழமையில் அமாவாசை), பாதோன் (ஜூலை, ஆகஸ்ட்) மாதம். 'இன்றைய நாளில் ஃபல்குவில் ஸ்நானம் செய்யும் அனைவருக்கும் கயாவில் ஸ்நானம் செய்த அதே பலன் கிடைக்க வேண்டும்' என்று இறைவனை வேண்டினான்.

பொது நன்மைக்காக அசுர குலத்தைச் சேர்ந்த ஒருவன் இப்படி ஒரு பிரார்த்தனை யைச் செய்ததில் நெகிழ்ந்து போனார் இறை வன். அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண் டார்.

இதனால் ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் வரும் அமாவாசை இங்கு விசேஷம். அப் போது இங்கு முன்னோர்களுக்குப் பிண்டம் அளித்தால் அது கயாவில் செய்ததற்குச் சமம். அதனால் அப்போது ஃபல்குவில் கூட்டம் குவியும்'' என்றார்.

''**நா**ம் இப்போது தரிசிக்கப் போவது ஓர் ஆலமரத்தை. அது எதற்கு சாட்சியாக இருந் தது தெரியுமா?'' என்று கேட்டார் ராமநாதன். அப்படிக் கேட்டபோதே அவர் கைகளில் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன.

நாங்கள் செல்லவிருப்பது எங்கள் குரு க்ஷேத்ரப் பயணத்தின் உச்சகட்டம் என்பதை என்னால் உணர முடிந்தது. ஐருகண்டியும் புரிந்துகொண்டதை அவன் அடுத்து சூசக மாகக் குறிப்பிட்ட வாக்கியங்கள் உணர்த்தின.

''எது நடந்ததோ அது நன்றாகவே நடந் தது. எது நடக்குமோ அதுவும் நன்றாகவே நடக்கும்''என்றான் அவன்!

**(பயணம் தொடரும்)**

## ஜாலி ஸ்டோர்ஸ்



# முதல்வர் வீட்டில் போக்கிரி..

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை நேரம். முதல்வர் வந்து அமர, உதவியாளர் நெருங்குகிறார்.

**முதல்வர் :** இன்னிக்கு என்ன நிகழ்ச்சிகள்?

**உதவியாளர் :** பத்து மணிக்கு 'போக்கிரி' வர்றார். பத்தே காலுக்கு 'பொறுக்கி'யை மீட் பண்றீங்க. பத்தரைக்கு 'கெட்டவ'னோடு சந்திப்பு.

*(காஃபியுடன் வரும் துணைவியார் திகைத்து நிற்கிறார்)*

**முதல்வர் :** என்ன அரண்டு போய்ட்டியா? கொஞ்ச நேரம் இங்கேயே நில்லு. உன் மனசுல இருக்கிற கேள்விகளுக்கு விடை கிடைக்கும்.

*(சரியாகப் பத்து மணிக்கு வருகிறார் 'இளைய தளபதி' விஜய்)*

**முதல்வர் :** வாங்க தம்பி! நல்லா இருக்கீங்களா?

**விஜய் :** உங்க தயவுல சினிமா உலகம் செழிக்குதுங்க. எல்லாருமே நல்லா இருக்காங்க. நான் மட்டும் நல்லா இல்லாமப் போய்டுவேனா? 'போக்கிரி' படத்தோட இருநூறாவது நாள் விழா வருதுங்க. அதுக்கு ஐயா கண்டிப்பா வரணும்.

**முதல்வர் :** நான் வர்றதைப் பத்தி ஆட்சேபணை இல்லை தம்பி. ஆனா அடுத்த நாளே 'முதல்வருக்கு சினிமா நிகழ்ச்சியில கலந்துக்கவே நேரம் சரியா இருக்கு'ன்னு...

**விஜய் :** எதிர்கட்சிக்காரங்க சொல்வாங்கன்னு நினைக்கறீங்களா? கவலை

வேணாங்கய்யா, உங்களைப் பார்க்க வர்றதுக்கு முன்னாடி ஜெயலலிதா அம்மாவையும், வைகோ ஐயாவையும் பார்த்துப் பேசிட்டேன். அந்த மாதிரி எதுவும் பேச மாட்டோம்னு வாக்குக் கொடுத்திருக்காங்க.

**முதல்வர்** : அட, இப்ப எல்லாம் அவங்க எதுவுமே பேசறதில்லையே தம்பி. அதுக்கும் சேர்த்து ஒருத்தர் 'சுருக்' 'சுருக்'குன்னு ஊசியா குத்தறாரே. அவரைப் பார்த்துப் பேசிட்டு வாங்க தம்பி.

**விஜய்** : சரிங்க ஐயா!

**முதல்வர்** : ஒரு நிமிஷம், அதென்ன அடுத்த படத்துக்கு 'அழகிய தமிழ் மகன்'னு அசிங்கமா பேர் வெச்சிருக்கீங்க.

**விஜய்** : ஐயாவுக்கு, விஷயம் தெரியாதுங்களா? அந்த டைட்டிலை மாத்தி 'ஊசி குத்தற உதவாக்கரை'ன்னு வெச்சுட்டோம்ங்க.

# பொறுக்கி.. கெட்டவன்!

**முதல்வர்** : வெரிகுட், இந்தப் படத்துக்கு இரட்டிப்பு வரிச் சலுகை கொடுக்க ஏற்பாடு பண்றேன். போய்ட்டு வாங்க தம்பி.

*(அடுத்து வருகிறார் சுந்தர்.சி)*

**சுந்தர்.சி** : ஐயா, ஆசிர்வாதம் பண்ணுங்க.

**முதல்வர்** : வாங்க சுந்தரரே! புதுப் புது கதாநாயகிகளோடு டூயட் பாட ஆரம்பிச்சுட்டீங்க. இனிமே டைரக்ஷன் செய்யறதா இல்லியா?

**சுந்தர்.சி** : செய்வேங்க. கதை ரெடி, ஹீரோவா நானே ரெடி. தயாரிப்பாளர்கூட ரெடிங்க. ஒரேயொரு பிரச்னை?

**முதல்வர்** : என்ன சொல்லுங்க?

**சுந்தர்.சி** : தலைப்பு கிடைக்கலை. 'ராங்கிப் பயல்', 'உருப்படாதவனே' 'நாசமா போக', 'கட்டையில போக'ன்னு விதவிதமா யோசனை பண்ணி பதிவு பண்ணப் போனா, ஏற்கெனவே யாரோ பதிவு பண்ணி இருக்காங்க ஐயா.

**முதல்வர்** : கவலைப்படாதீங்க சுந்தரரே, யோசிச்சு நானே உங்களுக்கு ஒரு தலைப்பு சொல்றேன்.

**சுந்தர்.சி** : நன்றிங்க. அடுத்த வாரம் 'பொறுக்கி' படத்தோட கேசட் ரிலீஸ். ஐயாதான் ரிலீஸ் பண்ணணும்.

**முதல்வர்** : முயற்சி பண்றேன். ரெண்டு நாள் விட்டு ஃபோன் பண்ணுங்க. உறுதியாச் சொல்லிடறேன்.

*(சுந்தர்.சி சென்றதும், உள்ளே நுழைகிறார் சிம்பு)*

**சிம்பு** : ஐயாவுக்கு வணக்கம்! உங்க பணியிலே எப்பவுமே இல்லே கணக்கம், அதுதான் பிடிக்கும் எனக்கும்!

**முதல்வர்** : அட, சிம்புவா? அடுக்கு மொழியை வச்சுத்தான் கண்டுபிடிக்க முடியுது. யாரோ பொம்பளைன்னு நினைச்சுட்டேன். என்ன இவ்வளவு நீளமா முடி?

**சிம்பு** : ஐயா, இப்ப நான் கெட்டவன், அதனால முடியை வெட்டாதவன், அடுத்த நிமிஷமே செத்தவன்.

**முதல்வர்** : போதும் சிம்பு. உங்க அப்பாகிட்டே ஒரு தலைமுறை ரசிகர்கள் மாட்டிக்கிட்டு பட்ட அவஸ்தை போதும். நீயாவது பாதையை மாத்து.

**சிம்பு** : ஐயா, டி.ஆருக்குப் பொறந்தவன் இந்த சிம்பு. இவனுக்கு இருக்கு தெம்பு! எவனும் வெச்சுக்க மாட்டான் வம்பு. அப்படி வந்தா நொறுங்கிடும் அவன் எலும்பு.



# ஒரு பொண்ணு ஒரு பையன்

இன்னுமொரு காதல் கதை. அன்பைச் சொல்ல முடியாமல் தவிக்கும் காதலர்களோட உணர்வை, படம் முழுக்கக் கடை பரப்பியிருக்காங்க. ஹீரோ, ஹீரோயின்லேர்ந்து எல்லாரும் ஒருவித படபடப்பாவே நடிச்சிருக்காங்க. காதல் காட்சிகளை இன்னும் புதுசா ட்ரை பண்ணியிருக்கலாம். க்ளைமேக்ஸ் ஆறுதல். பானுப்ரியா, சரத்பாபு, சரண்ராஜ், சார்லியோட பங்களிப்பு பரவசம் தருது. கார்த்திக்ராஜா இசை காதுக்குள் ரீங்காரமிடுது. குறிப்பா 'நெஞ்சில் வாழ்கிற' பாடல். அருள்தாஸின் ஒளிப்பதிவு காதலா உள்ளே இறங்குது. திரைக்கதைதான் ஸ்லோ. வேகம் பத்தல. பல இடங்களில் கற்பனை வறட்சி. ஒரு பொண்ணு, ஒரு பையன் இன்னுமொரு ஒட்டாத படம்!

**– மீனாள்**

**முதல்வர்** : நீ விஷயத்தைச் சொல்லிட்டுக் கிளம்பு.

**சிம்பு** : ஐயா, கெட்டவன் படத்துல வருது ஒரு ஸீன், அதுக்கு தேவை உங்க பர்மிஷன்!

**முதல்வர்** : புரியலையே! என் பர்மிஷன் எதுக்கு?

**சிம்பு** : நம்ம தலைமைச் செயலகத்தை என்னோட வலது கை சுண்டு விரல்ல எடுத்து, இடது கை கட்டை விரலுக்கு மாத்தி, வலது மூக்கு துவாரத்தால ஊதி, இடது காது மடலுல வெச்சி, வலது தோள் பட்டையில இறக்கி, மறுபடியும் பழைய இடத்துலயே வைக்கற மாதிரி ஸீன்.

**முதல்வர்** : ரொம்ப வம்பான ஸீனா இருக்கே! இதைப் பத்தி நான் ஸ்டாலின், கனிமொழி, அழகிரி, ஸ்டாலின் பேரன்னு எல்லார்கிட்டேயும் கலந்து பேசிட்டுச் சொல்றேனே...

**சிம்பு** : நன்றிங்க! அடுத்து நான் பிரதமரைப் பார்க்கணும். நாடாளுமன்றத்தை நகத்தால சுரண்டி பொடியாக்கற ஸீன் விஷயமா பேசணும்.

**துணைவியார்** : நம்ம சினிமா ரொம்ப முன்னேறிடுச்சுங்க.

**முதல்வர்** : சரியாச் சொன்னே, இதைப் பாராட்டி உடனே ஒரு கவிதை எழுதறேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப் படங்கள்!

*(எழுந்து தமது அறைக்குள் செல்கிறார் முதல்வர்)*

●

"பிச்சைக்காரர் வேடத்தில் நகர்வலம் சென்றது ஓ.கே. அதற்காக மன்னர் இப்படியா மாறிவிடுவது!"

"என்ன நடந்தது?"

"'யாரங்கே' என்று கேட்பதற்குப் பதிலாக 'சோறெங்கே' என்கிறார்!"

– அரவக்குறிச்சிப்பட்டி எம்.அசோக்ராஜா



# சுத்தமா மறந்து போச்சு!



''படம் பேரைக் கேட்டாலே கூட்டம் ச்சும்மா அலைமோதணும்...''



'' 'எம்ப்ளாய்ன்மெண்ட் எக்சேஞ்ஜ்'னு வைச்சிரலாம் ஸார்.''

- எஸ்.சம்யுக்தா



''எனக்குக் கல்யாணமான விஷயத்தைக்கூட அந்த ஜோசியர் கரெக்டா கண்டுபிடிச்சிட்டார்...''

''எப்படிச் சொல்றே?''

''எனக்குக் கரண்டியில தோஷம் இருக்குன்னு சொன்னாரே...''

- கே.ஆனந்தன்



''டாக்டர், படிச்சதெல்லாம் சுத்தமா மறந்து போயிடுது!''

''அடடே! நீங்களும் நம்ம 'கேஸ்'தானா!''

- அனன்யா





''இது கொலைதான்னு எப்படிச் சொல்றீங்க?''

''டி.வி. பார்த்துட்டிருக்கும்போதுதானே செத்திருக்காரு!''

- ப.ராமகிருஷ்ணன்

# சரணாலயம்

சாரதாவுக்கு, இருக்கும் தனிமை போதாதென்று ஹரி வேறு போனில் கத்திவிட்டானே என்ற வருத்தம் மேலிட்டது. போனே தேவை யில்லை. இன்னும் கொஞ்சம் கத்திப் பேசி இருந்தால் பிராமிங்ஹாமிலிருந்து நேரிடையாகவே கேட்டிருக்கும்.

''அப்பாயில்லாம நீ ஒண்டியா இந்தியால என்ன பண்ணப் போறே? நமக்கோ ஜாதி, ஜனம் இருந்தும் இல்லாத மாதிரிதான். சமையல் பண்றது, டி.வி. பாக்கறதெல்லாம் உடம்பு நல்லா இருக்கும் வரை ஓ.கே. நாளைக்கே படுத்துட்டா? நான் ஃப்ளைட் புடிச்சு வரக்கூட மூணு நாள் ஆகும். நேரத்தோட வந்துட்டா, மெடிக்கல் இன் ஷுரன்ஸ் ஈ.ஸி. கடைசில ஹாஸ்பைஸ் கேஸா வந்துட்டா, என் கதி அதோ கதிதான். யோசனை பண்ணு. இது அமெரிக்கா, ஆரோக்கியம், பணம் ரெண்டும் முக் கியம். என்கூட வேல பாக்கறவன் நல்லாவே இருந்தான். திடீர்னு ஏதோ வியாதின்னான். இப்ப டெர்மினல் இல்னெஸ்ன்ற பேர்ல ஹாஸ்பைஸ்ல இருக் கான். நானும் ஜென்னாவும் அவ னைப் போய் பாத்துட்டு, அப் படியே வெர்மான்ட் போறோம், வர வாரம், பத்து நாளாகும். யோசனை பண்ணிட்டு ஈமெயில் பண்ணு. ஓ.கே.மா... பை!''

பிள்ளைகள் வளர்ந்துவிட்ட மறுநிமி ஷமே அவர்கள் சௌகரியத்துக்கு ஏற்ப நாம் மாற வேண்டும் என்று பிள்ளைகள் எதிர்பார்ப் பது ஏன்?

ஹரி.. ஒரே பிள்ளையென்ற போதும் அமெ ரிக்கா போகத்தான் போவேன் என்றபோது ஏதாவது கூறினாளா?

திடீரென அண்டர்ஸ்டாண்டிங் வந்துவிட்டது; கெமிஸ்ட்ரி வொர்க் அவுட் ஆகிறதென்றெல்லாம் கூறி கூட வேலை பார்த்த ஜென்னாவைக் கல் யாணம் பண்ணிக்கொண்டு லேட்டாகச் சொல்லி, ஊரெல்லாம் உறவெல்லாம்

ஸ்ரீரா



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

இவளைக் கேள்வி கேட்கும் நிலைக்கு ஆளாக்கினானே... அப்போது? இவள் ஒன்றும் கூறவில்லை. ஹரியை... ஹாரியென்று மாற்றியபோது? இல்லை.

அப்படியிருக்கையில் இவளும் ஒரு மனுஷி. இவளுக்கும் ஆசாபாசங்கள் உண்டென்பதை உணரக்கூட மறுக்கிறானே!

**ம**றுநாள் ஹரி வெர்மாண்ட் போனது ஞாபகமின்றி ஈமெயில் செக் பண்ணியபோது, யாரோ டேவ் ஜான்சன் என்பவர் அனுப்பி இருந்த ஈமெயில் கண்ணில் பட்டது. ஹரி பெயருடன் தொடங்கி இருந்தது.

டியர் ஹரி...

உங்கள் பெயர் எழுதப்பட்ட ஆனிடைலர் எழுதிய 'டிக்கிங் டு அமெரிக்கா' என்ற புத்தகம் ஒரு ஈமெயில் அட்ரசுடன் இந்த ஹாஸ்பைஸ் முன் ரூமில் கிடைத்தது. வந்து பெற்றுகொள்ளவும் (ஒரு வாரத்துக்குள்). இது ஹாரி அல்லாது வேறு எவருடைய ஈமெயில் அட்ரஸ் ஆனால், அவருக்கு தயவுசெய்து தெரிவியுங்கள்.

நன்றி.

- டேவ்

என்ன ஒரு மனசு! இந்த ஹரி எப்போதும் இப்படித்தான். போகிற இடமெல்லாம் எதையாவது புத்தகம், பேனா, கைக்குட்டை என விட்டுவிட்டு வந்துவிடுவான். என்னவோ தோன்றியது பதில் எழுத.

டேவ் அவர்களே...

நான் சாரதா, ஹாரியின் தாய். இது இந்தியாவிலிருக்



# அவன் ஆசைப்பட்ட தாயன்பு என்

கும் என்னுடைய ஈமெயில் அட்ரஸ். ஹாரி வெர்மான்ட் சென்று இருக்கிறான். வந்ததும் கூறுகிறேன். ஹாஸ்பைஸ் என்றால் அது என்ன மாதிரி வியாதிகளைக் குணப்படுத்தும் இடம்? ஏனென்றால் என் மகன், நான் அமெரிக்கா வர வேண்டும் என்று கூறியபோது பேசிய பல விஷயங்களில் ஹாஸ்பைஸ் என்ற இடமும் ஒன்று. அது என்ன இடம் என்று கூறுவீர்களா?

- சாரதா

சாரதா ஆட்டோவில் சென்று கொண்டிருந்தாள். அவள் கணவன் பரமேசுவரனின் சித்தி அலமேலுவைக் காண்பதற்கு. அவளுக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. எல்லா உறவுகளையும் வெட்டி எறிந்து விலகி இருந்தவளை எது மனம் மாறச் செய்தது!

நினைக்கையில் வியப்புதான். டேவ் அனுப்பியிருந்த ஈமெயில் பதில் நிஜமோ? பார்த்துவிடலாமே, அமெரிக்கனாயிருந்தாலும் தாய் அன்புக்கு ஏங்கியவன் போலும். இத்தனை அன்பாய், இத்தனை சட்டென்று ஹரிகூட ஈமெயில் பதில் பண்ணியதில்லை. அம்மா என்று கூப்பிடலாமாவென்று அனுமதி கேட்கிறானே... பாவம். எத்தனை பெரிய விஷயத்தை எத்தனைச் சுலபமாய்க் கூறி இருந்தான். என்ன சொன்னான்? ம்... மனித உறவுகள் கசப்பாக ஆகவோ, நம்மைக் காயப்படுத்தவோ காரணம் நாமும் நம் எண்ணங்களுமே தவிர வேறு எவருமில்லை!

மேற்கொண்டு எண்ணத்தை ஓட விடாது அத்தை வீடு வந்திருந்தது. ஒரு காலத்தில் சாரதாவைப் படாதபாடு படுத்தியவர்களில் முதலாவது நபர் இந்த அத்தை அலமேலுதான். உள்ளே நுழைந்தாள். ''யாரு...?'' என்றபடி அலமேலு மெல்ல எழுந்தாள்.

''நான்தான் அத்தை, சாரதா...'' என்று செருப்பைக் கழற்றிவிட்டு உள்ளே நுழைந்தாள்.

''யாரு?... பரமு பொண்டாட்டியா? வாடியம்மா... வா... வந்து ஒக்காரு...'' கைகளை நீட்டி, பிடித்திழுத்து அமர வைத்தாள். என்ன ஆச்சரியம்!

''எப்படி இருக்கீங்கத்தை? ஏன் இப்படி பின்னாடி போர்ஷன்ல வந்து ஒண்டியா இருக்கீங்க? ஒங்க பசங்க ஒங்களோட இல்லையா?''

''ம்... ஊர்ல சௌக்கியமா இருந்தேன். அந்த வீட்டையும் வித்துட்டு பசங்க பேச்சைக் கேட்டு, அவனுங்க என் கடைசி காலத்தைப் பாத்துப்பாங்கன்னு நம்பி கௌம்பி வந்தேன். இங்கே வந்தப்பறம் மேல் போர்ஷன், கீழ் போர்ஷன்னு எழுதி வாங்கிட்டு, வாடகைக்கும் விட்டுட்டு ஊர்ல வீடு வித்த பணத்தையும் பங்கு போட்டு எடுத்துக்கிட்டு ஆளுக்கொரு திசையா போயிட்டானுங்க. கடைசில என் கதி இப்படி ஆயிடுச்சு.''

சட்டென்று சாரதாவுக்கு டேவின் ஞாபகம் வந்தது.

'அமெரிக்காவில் வந்து குடியேறும் பல பேர் வலுக்கட்டாயமாகச் சிக்கிக் கொள்ளும் கட்டம்தான் பெற்றோர்களை என்ன செய்வது என்ற கேள்வி. நீங்கள் கேட்ட ஹாஸ்பைஸ் என்பது உறவுகளை, சொந்தங்களை தேடும் இடம் என்று



திருமணத்துக்குப் பிறகு மாளவிகா ரொம்பவே மாறிவிட்டார். கதைக்கு முக்கியத்துவம் உள்ள படங்கள் என்றால் மட்டும்தான் ஒப்புக்கொள்கிறார். ''நல்ல கதை இருந்தா ஃப்ரீயாகூட கால்ஷீட் தருவேன். 'கட்டுவிரியன்' படத்துல முதல் முறையா டபுள் ரோல் பண்றேன். பயங்கரமான

# வார்த்தைகளில் கிடைத்திருக்குமா?



மட்டும் தெரிந்துகொள்ளுங்கள்' அவளுக்குச் சிரிப்பாய் இருந்தது.

வீட்டைச் சுத்தப்படுத்தி, அலமேலுவுக்குச் சமைத்துப் போட்டு, நாள் முழுக்கப் பேசி ஆறுதல் அளித்துவிட்டுத்தான் வீடு திரும்பினாள். தன்னாலும் இப்படியெல்லாம் அன்பு காட்ட முடியுமா? முடியுமானால் அதை வெளிக் கொணர்ந்தவன் டேவ்தான்.

விளக்கமாக ஈமெயிலில் செய்து நன்றி கூறினாள். டேவின் ஃபோன் எண், விலாசம் அறிய ஆவலாய் இருப்பதையும் தெரிவித்தாள். டேவ் தனக்குத் தாய்க்கு நிகரான மரியாதை கொடுப்பதால் நிச்சயம் அவனோடு ஃபோனில் பேச முடியும் என்று எண்ணி இருந்தாள். ஆனால், அவள் எதிர்பார்ப்புக்கு எதிராக டேவ் அவற்றைத் தராதது மட்டுமல்ல, அதன் காரணத்தையும் கூடத் தெரிவிக்காதது வருத்தமே. அடுத்து என்ன செய்வது? பேசாமல் ஈமெயிலே பண்ண வேண்டியதுதான்.

'வாழ்க்கை என்பது முரண்பாடுகள் நிறைந்தது. பாம்புகளை வளர்ப்பதும், விஷம் எடுத்து மருந்து கம்பெனிகளுக்கும், ஆராய்ச்சியாளர்களுக்கும் விற்பனை செய்வதும் என் வேலை. விஷம் எப்படி மருந்தாகும்? அது கொல்லும் தன்மையுடையதல்லவா என்றெல்லாம் யோசித்தேன். ஆனால் அந்த விஷமும்கூட ரத்தத்தை உறைய வைக்கும் மருந்து சோதனைக்கும், வாதம், நரம்பு சம்பந்தப்பட்ட வியாதிகளுக்கும் மருந்தாகும் என்று அறிந்து ஆச்சரியப்பட்டேன். இப்போது என்னுடைய உங்கள் மீதான அன்பு, உங்களுக்கு மருந்தாய் குணப்படுத்தவில்லையா? ஏன் இவன் தன்னை பாம்போடு ஒப்பிடுகிறான் என்று கேள்வி எழுப்புகிறதா உங்கள் மனம்?'

ஏனோ சட்டென்று அவன் அங்கே நிறுத்தி விட்டாற்போல தோன்றியது. அதன் பின் ஈமெயில் ஏதும் அவன் அனுப்பவில்லை.

மனம் ஏனோ இனம்புரியா சோகத்தில் மூழ்கியது போன்ற உணர்வு சாரதாவுக்குத் தோன்றியது. பையனுக்கு போன் போட்டு புத்தகம் பற்றிய விவரம் சொல்லி, டேவ் பற்றிக் கேட்டுக்கொண்டு வரச் சொன்னாள். ஹரி இரண்டு நாள் பொறுத்து ஃபோன் செய்தான்.

''அம்மா... அந்த டேவ், காலம் பூரா பணம், குடி, கூத்து, கேளிக்கைன்னு ஆட்டம் போட்டுட்டு கடைசில கிட்னி ஃபெயிலியர் ஆகி டயாலிசிஸ் பண்ணிக்கிட்டு இருந்தானாம். சின்ன வயசுல அம்மாவ கத்தி காட்டி பயமுறுத்தி... கொடுமைக்காரன் போல. 'அம்மா எப்படியாவது வருவா... அதுவரை நான் உயிரோடு இருப்பேன்'னு சொல்லிக்கிட்டிருந்தவன், ஒரு பத்து நாள் முன்னால அம்மாவை சந்திச்சிட்டேன்னு சொல்லி டயாலிசிஸ் நிறுத்திட்டிருக்கான்'' சாரதாவின் கண்கள் கலங்கின. ஹாஸ்பைஸ் - குணப்படுத்த முடியாது என வைத்தியர் முடிவு செய்தபின் பூமியின் பயணத்தில் சற்றே இளைப்பாறி, நிம்மதியாய், நிதானமாய் தங்கிப் பயணம் முடிக்கும் இடம். டேவுக்கு அவன் ஆசைப்பட்ட தாயன்பு என் வார்த்தைகளில் கிடைத்ததா? யாருக்கு அவன் யாராய் இருந்தால் என்ன, எனக்கு மகனாய், மருந்தாய் இருந்தவன்! ●

அமானுஷ்ய கதை. திகில்ல நீங்க உறையப்போறது உறுதி. இந்தப் படத்துலருந்து புது மாளவிகாவை நீங்க பார்க்கப் போறீங்க'' என்றவரிடம், 'திருமண வாழ்க்கை எப்படி இருக்கு?' என்றால், ''என் கணவர் எனக்குக் கிடைத்தது நான் செய்த அதிர்ஷ்டம். சினிமாவும் குடும்ப வாழ்வும் வேறு வேறு என்பதைப் புரிந்தே இருக்கிறேன்'' என்கிறார்.

– லாவண்யா

# EVE'S  TIMES

*Making a Choice...*

## The Teacher Who Changed My Life!

Write and win a lot of gifts

**1 September 2007**
**Price Rs. 10/-**

**The New Media - Jobs For Everybody**

**Jus' Ask Brinda**

**Tips From Mallika Badrinath**

**Don't Make Noise - Swarnamalya**

**Skin Care From Home - Vasundhara**

## Teen Mag

**Exclusive Centrespread for Teens**

**How to Handle Your Pesky Sister - Actor Sandhya**

**We Need A New Capital City - Karti Chidambaram**

**Subscriptions Details:**
Subscription Rates
6 Months Rs.120
12 Months Rs.220

**Contact:**
Bharathan Publications Pvt Ltd.,
Kalki Buildings,
No: 47, N.P. Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai 600 032.
Ph: 22251324/22251522
Mail to: subscription@kalkiweekly.com

**Make a Smart Choice Now!**




* விடுவிக்கப்பட்டவர்!

* ஒதுங்கும் போக்கு!

* அதிரடி ஆணை!

● எம்.மோஹன், கோவை - 25

? இந்தியா டுடே, ரஜினிகாந்த்துக்கென ஒரு சிறப்பிதழை வெளியிட்டுள்ளதே, ஒரு நடிகருக்கான சிறப்பிதழ் என்பது இதுவே முதல் முறை - உங்கள் கருத்து..?

! எதை, எப்போது, எப்படிச் செய்தால் லாபம் கிட்டுமோ அவ்வாறு செய்வதே அறிவுடைமை. அதைத்தான் இந்தியா டுடே செய்துள்ளது.

● கு.அருணாசலம், தென்காசி

? 'காலி இடங்களுக்கு நடக்கும் உள்ளாட்சித் தேர்தலை அ.தி.மு.க. புறக்கணிக்கும்' என்று ஜெ. அறிவித்துள்ளாரே?

! 'ஊழல் ஊழல்' என்று கூவி ஒதுங்குவதில் பெருமை ஏதும் இல்லை. அதைக் காட்டிலும் 'உள்ளாட்சி தேர்தல்களில் கட்சி அரசியலே தேவையில்லை' என்கிற கொள்கையை ஏற்றால் பாராட்டலாம்.

● து.மணி, சென்னை - 93

? கலைஞர் டீ.வி. சோதனை ஒளிபரப்புகளைப் பார்த்தீர்களா? எப்படி?

! எல்லா டீ.வி சானல்களையும் போல சினிமா சார்ந்தே உருவாகி வருகிறது.

● எல்.மாறன், மேல்பட்டி

? வெற்றி பெற்ற வெற்றுப் படத்துக்கு ஊடகங்கள் செய்த அலம்பலில் நீங்களும்

நீங்கள் கேட்டவை தராசு

தானே சங்கமித்திருந்தீர்கள்?

! பார்ப்பதற்கு முன் எதிர்பார்ப்பு காரண மான அலம்பல். பார்த்த பின், ஏமாற்றம் காரணமான புலம்பல்!

● ச.நாகரத்தினம், திருப்பூர்

*? மதியச் சத்துணவு, வாரம் மூன்று முட்டைகள், இலவச பாட புத்தகங்கள், இலவச சைக்கிள், ஊரெங்கும் அரசுப் பள்ளிகள், கல்வி உதவித் தொகைகள், வங்கிகள் வழங்கும் கல்விக் கடன்... இவ்வளவு திட்டங்கள் இருந்தாலும் கல்வி வளரவில்லையே?*

! இலவசங்களால் கல்வி வளராது; கல்வி கற்பது பரவசமாக வேண்டும்.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

*? சியாச்சின் ராணுவ உடைகள் காஷ்மீர் கடைத் தெருக்களில் விற்பனை செய்யப்பட்டு பலகோடி ரூபாய் மோசடி செய்யப்பட்டிருப்பது பற்றி..?*

! மோசடியால் ஏற்பட்ட பொருள் இழப்பைக் காட்டிலும், அந்தச் சீருடை கள் தவறாகப் பயன்படுத்தப்படக்கூடிய வாய்ப்புகளால் விளையக்கூடிய அபாயம் பயங்கரமானது!

● எஸ்.ராமசாமி, வடக்கு தமிழ்பாளையம்

*? 'அமளி காரணமாக பாராளுமன்றக் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டு அலுவல்கள் பாதிக்கப்பட்டால் அன்றைய அலவன்ஸ் (எம்.பி.க்களுக்கு) கட்!' என்ற யோசனையை அனைத்துக் கட்சிகளும் நிராகரித்து விட்டனவே? இதில் மட்டும் ஒற்றுமை...?*

! ஆச்சர்யமில்லை; ஒரு தரப்பு அமளியில் ஈடுபடும்போது மற்றொரு தரப்பு அது கூடாது என்றுதானே அமளி செய்கிறது!

● ஜி.சுந்தர்ராஜன், சென்னை - 42 ★

*? சென்னை மாநகராட்சி, குப்பை எடுக்கும் துப்புரவுப் பணியை ஒரு நிறுவனத்திடமிருந்து மற்றொரு நிறுவனத்துக்கு மாற்றியதற்குக்கூட ஒரு விழா நடத்த வேண்டுமா?*

! விழா நடத்தியதில் தப்பில்லை. புதிய நிறுவனம் துப்புரவுப் பணியில் வீழ்ச்சி அடைந்துள்ளதுதான் பரிதாபம். அதனால் விழாவே வீழ்ந்துவிட்டது.


★ தன்னைப் பற்றிய...


★ மன்னிக்க முடியாதது...

● சு.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

*? "நானும் ரஜினியும் உதாரண புருஷர்கள் அல்ல" என்று கமல்ஹாசன் பேசியிருக்கிறாரே?*

! அதைப் புரிந்துகொண்டது பற்றி ஓரளவு சந்தோஷம். ரசிகர்களுக்கும் இதை உணர்த்தி, ரசிகர் மன்றங்களைக் கலைந்து விட்டால் ரொம்ப சந்தோஷம்.

● பொன்விழி, அன்னூர்

*? ஜெ. வீட்டில் ஆர்ப்பாட்டம் செய்த காங்கிரஸ்காரர்கள், ஆட்சியில் பங்கு கேட்டு கோபாலபுரம் முன்போ, அறிவாலயம் முன்போ ஆர்ப்பாட்டம் செய்வார்களா?*



❑ ரூ.100/- பரிசு பெறுபவர் :

எல்.ஐ.சி.சுப்பராமன்.
உறையூர்

★ ரூ.50/- பரிசு பெறுபவர் :

ஜி.சுந்தர்ராஜன்,
சென்னை - 42

! அங்கு செய்து என்ன பிரயோஜனம் - சோனியா வீட்டு வாசலில் அல்லவா செய்ய வேண்டும். சத்தியமாய் மாட்டார்கள்!

● எல்.ஐ.சி.சுப்பராமன், உறையூர் ❑

*? சட்டத்தைக் காக்க வேண்டிய ஆளுங் கட்சியினரே தமிழகத்தில் ரயில் மறியல் செய்வது வன்முறைக்கு வழி வகுக்காதா?*

! தமிழகத்தில் மட்டுமல்ல, மத்தியிலும் தி.மு.க. ஆளும் கட்சி என்பதைக் கவனத்தில் கொள்ளவும். அரசியல் நிர்ணய சட்டத்தின் பெயரால் பதவிப் பிரமாணம் ஏற்ற அமைச்சர், அதனை மீறுவது மன்னிக்க முடியாதது. இதே போராட்டத்தை எதிர்கட்சியினர் அறிவித்திருந்தால், முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக உத்தரவுகளை அரசே பிறப்பித்திருக்கும்.

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

*? தொப்பையைக் குறைக்க போலிஸாருக்கு சென்னை கமிஷனர் அறிவுரை கூறியிருப்பது பற்றி..?*

! அவசியமான அட்வைஸ்தான். நல்ல வேளை நாஞ்சில் குமரனுக்குத் தொப்பை துளிக்கூட இல்லை!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

*? உ.பி. மாநிலத்திலுள்ள அத்தனை ரிலையன்ஸ் கடைகளையும் மூடச் சொல்லி உத்தரவு போட்டுவிட்டாரே அந்த மாநில முதல்வர் மாயாவதி?*

! தைரியமான உத்தரவுதான். ஆனால், நெகடிவ் சிந்தனைகளால் நன்மை விளையாது. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர ஆக்கபூர்வ திட்டங்களே உதவும்.

● கே.வி.ராமன், சென்னை - 73

*? அணு சக்தி ஒப்பந்தத்துக்கு அமெரிக்கா ஏன் இந்தியாவை மட்டும் வற்புறுத்தியுள்ளது?*

! அணு சக்திக்கு உதவ வேணுமானால் அணு ஆயுத முயற்சி, சோதனை, உற்பத்தி ஆகியவற்றுக்குத் தடை; மேற்பார்வை உரிமை என்பது அமெரிக்காவின் நிபந்தனை; பொதுக் கொள்கையும்கூட. இதில் இந்தியாவின் இறையாண்மையை உத்தேசித்து, அமெரிக்கா சில அம்சங்களில் விட்டுக் கொடுத்திருக்கிறது என்பதே உண்மை. ஆனால், கம்யூனிஸ்ட்டுகளுக்கும் எதிர்கட்சிகளுக்கும் அது போதவில்லை.

● டி.முருகேசன், திருவாரூர்

*? சிபு ஸோரன் மீண்டும் மத்திய அமைச்சர் ஆகிவிடுவாரா...?*

! ஆகக்கூடாது! நீதி மன்றம் அவரை நிரபராதி என்று கருதி விடுவிக்கவில்லை. 'அரசு தரப்பு வழக்குரைஞர்கள் குற்றங்களை நிரூபிக்க *'பரிதாபகரமான'* முறையில் தவறிவிட்டார்கள்' என்று தீர்ப்பு வழங்கி விடுவித்திருக்கிறது. இதற்கு என்ன அர்த்தம் என்று மக்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

●



# தித்திக்கும் திங்கள்

**இந்த வார தித்திக்கும் திங்களில் உள்ளம் திறந்த வாசகர்கள் :**

***இருபத்தைந்து வருடங்களாக கல்கியை வாசிக்கும் ஈரோடு ரேவதிப்ரியன்.***

**பொது** : புத்தகம் கைக்கு வந்ததும் ஒரு மணி நேரத்தில் எல்லா பக்கங்களையும், பகுதிகளையும் படிச்சு முடிச்சுடுவேன்.

**கவர் ஸ்டோரி** : 'சினிமாவும் சிவப்பழகும்...' பற்றி ஒற்றை வரியில் சொல்லணும்னா ஒண்டர்ஃபுல். எப்படி உங்களுக்கு மட்டும் இப்படி வித்தியாசமான விஷயம் கிடைக்குது!

**குறை** : பக்கங்களை அதிகப்படுத்தலாம்.

**நிறை** : 'கடுகு வெடிக்கும் வரை' ஒரே பக்கம்னாலும் அதில் வந்த விஷயத்தின் காரம் உச்சி மண்டை வரை உரைச்சது.

***ஐம்பது வருட கல்கி வாசகர் செகந்திராபாத் வி.வெங்கட்ராமன் :***

**குருக்ஷேத்ரம்** : அருமையான தொடர். நான் டெல்லியில் வசிச்சு இருக்கேன். அந்த இடங்களையும் பார்த்திருக்கேன். தொடரைப் படிச்சதும் மீண்டும் அங்கே போன உணர்வு.

**ஷொட்டு** : சமீப காலமா வடிவமைப்பு நல்லா இருக்கு.

**எதிர்பார்ப்பு** : 'பார்த்திபன் கனவு' தொடர் மாதிரி, ராஜாஜியின் படைப்புகளை மீண்டும் வெளியிட்டால் இன்றைய தலைமுறையினருக்கு தெரிஞ்சுக்க சந்தர்ப்பமா அமையும்.



✱ பொன்விழி



✱ முருகேசன்

***பதினைந்து வருட வாசகி சென்னை, இந்திரா முரளி :***

**சேவை** : விழிப்புணர்வு தரும் விதமாவர்ற பகுதிகள் ரொம்பப் பயனுள்ளதா இருக்கு. எஃப்.ஐ.ஆர்., உயில், இயாஸ் கனெக்ஷன்னு தெரிஞ்சு வெச்சுக்க வேண்டிய பல விஷயங்களை எளிமையா சொல்றீங்க, பாராட்டுகள்!

**தேவை** : குழந்தைகளுக்காக படக்கதை அல்லது ஒரு பக்கத்தில் நீதி போதனைக் கதையை வெளியிடலாம். எங்கள் குழந்தைகளிடமே கொடுத்து படிக்கச் சொல்வோம். நாளடைவில் அவங்க கல்கி



✱ இந்திராமுரளி

# ஊர்ரி மனமவட வைர காரம்!

யின் வாசகரா தொடர இது உதவும்.

**இருபது வருடங்களாகப் படிக்கும் திருச்சி முருகேசன் :**

**விருப்பம் :** தராசு பதில்கள், தலையங்கம்.

**காரணம் :** தினமும் செய்தித்தாள்

✱ வெங்கட்ராமன்



களைப் படிக்க முடிவதில்லை. இந்த இரண்டு பகுதிகளையும் படிக்கும்போது ஒரு வாரத்து நாட்டு நடப்பை விளக்கம், தீர்வுகளோடு தெரிஞ்சுக்க முடியுது. இந்த வார தராசு பதிலில் 'சோனியாவும் ஞாநி' நல்ல நையாண்டி.

**ஆவல் :** பக்கங்கள் இன்னும் அதிகரிக்கணும். வாங்கின கொஞ்ச நேரத்துல படிச்சு முடிச்சுடறோம். அதனால பக்கங்களைக் கூட்டுங்க.

✱ ரேவதி ப்ரியன்



**பொன்விழி, அன்னூர் :**

**சந்தோஷம் :** என்னுடைய படைப்பு முதல் முறையா வந்தது கல்கியில்தான். அதை மிகப்பெரிய கௌரவமா நினைக்கிறேன்.

**கவர்ந்தது :** 'காந்தி மை ஃபாதர்' சினிமா விமர்சனம், சி.ஐ.டி. விஷ்வா படக்கதை, ஒரு கதையைப்போல நகரும் சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்.

**எதிர்பார்ப்பது :** நிமிடக் கதைகள், சின்னச் சின்ன சினிமா செய்திகள், இன்னும் அதிகமான ஜோக்குகள், அதிக பக்கங்கள். ●

## டி.வி. பரிசு பெறும் வாசகர் யார்?

# வாசகர்கள் கேள்விகளுக்கு சூர்யா பதில்

கல்கி வாசகர்களுக்கு அறிவிக்கப்பட்ட ஒரு லட்ச ரூபாய் பரிசுப் போட்டிகளில், முதல் போட்டியான மூன்று வார சினிமா குவிஸ்சில், நடிகர் சூர்யாவுக்கு ஒரு கேள்வி எழுதி ஏராளமான வாசகர்கள் உற்சாகமாகக் கலந்துகொண்டனர். சரியான விடைகளை எழுதிய வாசகர்களின் கேள்விகளிலிருந்து சிறந்த கேள்விகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, கோயம்பேடு நடேசன் நகரில் 'வேல்' படப்பிடிப்பில் இருந்த சூர்யாவைச் சந்தித்தோம்.

உணவு இடைவேளையில் கேரவனில் இருந்த சூர்யா, ''ரொம்ப சாரி, ஒரு மாசத்துக்கு மேலே தென்காசியில் அவுட்டோர் ஷூட்டிங். அதை முடிச்சிட்டு ஊருக்கு வந்தவுடன் 'ஜோ' டெலிவரி. இப்படியே தள்ளிக் கிட்டுப் போயிடுச்சு! தாமதத்துக்கு கல்கி வாசகர்கள்கிட்டே என் வருத்தத்தைத் தெரிவிச்சிக்குறேன்!'' என்றார்.

பிறகு ஒவ்வொரு கேள்வியாகப் படித்து, பதில் சொல்ல ஆரம்பித்தார். புதுக்கோட்டையைச் சேர்ந்த சிவகாமி ஆனந்தின் கேள்வி: **'சிறந்த நடிகர் ஆவதற்கு சிவகுமார், சூப்பர் நடிகர் ஆவதற்கு சூர்யா இருவரும் எடுத்துக் கொண்ட கால அவகாசத்தைவிட ஒரே படத்தில் அசத்தியிருக்கும் தம்பி கார்த்தியின் திறமை பற்றி அண்ணனாக இல்லாமல், ஒரு சக நடிகனாக உங்களுடைய பகிரங்கமான கருத்து என்ன?'**

''படிப்பாகட்டும், மற்றவர்களிடம் தைரியமாகப் பேசுவதாகட்டும், எந்த ஒரு விஷயத்தையும் அலசுவதாகட்டும், எதையும் திட்டமிட்டுச் செய்வதாகட்டும், என்னைவிட என் தம்பி சிறப்பாகச் செய்வார்.

'பருத்தி வீரன்' படப்பிடிப்பு நடந்த இரண்டு வருடத்தில் நானும் அவரும் சினிமா பற்றி ஐந்தாறு தடவைகள் தான் பேசியிருப்போம். அப்போதுகூட எப்படி நடிக்க வேண்டும் என்று அட்வைஸ் கொடுக்காமல், அவருடைய தன்னம்பிக்கையை அதிகரிக்கும்படியாகவும், தூக்கம், ஷூட்டிங் இரண்டையும் பேலன்ஸ் பண்ணுவது, உடல்நலம் மற்றும் எடை அதிகரிக்காமல் பராமரிப்பது போன்ற பொதுவான விஷயங்கள் பற்றியே பேசினேன். ஆனால், படம் முடிவடைந்த பிறகு திரையில் பார்த்து பிரமித்துப் போனேன். 'ஆஹா! இவன் நமக்கே போட்டியா வந்



துட்டானே! நாம பேசாம வேற தொழில் பார்த்திடலாமா?'ன்னு நெனச்சேன். படத்தில் சின்னச் சின்ன விஷயங்களைக்கூட நுணுக்கமாகக் கவனித்து, சிறப்பாகச் செய்திருந்தான். நானும் அவனும் இயக்குனர் பாலாவைச் சந்தித்தபோது, 'வெளிப்படையாகச் சொல்கிறேன். உன்னைவிட கார்த்தி நன்றாக நடிக்கிறார்' என்று சர்ட்டிபிகேட் கொடுத்தார். அது முழுக்கமுழுக்க நானும் ஒப்புக்கொள்ள வேண்டிய உண்மைதான்.''

பெருமையுடன் தம்பி புராணம் பாடியவர், **'சினிமாவுக்கு வந்த பிறகு, பழைய சரவணனாகவே இருந்திருக்கலாமே என எப்போதாவது நினைத்ததுண்டா?'** என்ற திருவாரூர் வாசகர் சரவணனின் கேள்விக்குப் பதில் சொன்னார். ''பழைய சரவணனாகவே நான் இருந்திருந்தால், இந்தச் சமுதாயத்துக்கு என்னால் பெரிய அளவில் ஒன்றும் செய்திருக்க முடியாது. என் பெற்றோருக்குப் பெருமை சேர்த்திருப்பேன் என்றுகூடச் சொல்ல முடியாது. ஓர் ஆயத்த ஆடைத் தொழிற்சாலை நடத்திக் கொண்டு இருந்திருப்பேன்; ஒரு குடும்பம் இருந்திருக்கும். ஒரு சாதாரணப் பிரஜையாக வாழ்க்கை நடத்தியிருப்பேன். லட்சக் கணக்கான ரசிகர்களையும், என் நலனில் அக்கறைக் கொண்டவர்களையும் என்னால் நிச்சயம் சம்பாதித்திருக்க முடியாது.''

# "ஜோதிகா மீண்டும் நடிப்பார்!"

புரசைவாக்கம் வைஷ்ணவி, சூர்யா-ஜோதிகா இருவரது தீவிர ரசிகையாம். அவருக்கு **'ஜோதிகாவிடம் சூர்யாவுக்கு மிகவும் பிடித்தது எது? அழகா? திறமையா? ஆர்வமா?'** என்று தெரிந்துகொள்ள ஆவல். ''இவை எல்லாமே சேர்ந்த கலவைதான் ஜோதிகா. முதலில் நான் அவரது ரசிகனாக இருந்தேன். அப்புறம் அவரது நண்பன். பிறகு காதலர்கள் ஆனோம். இப்போது கணவன் - மனைவி. அவரிடத்தில் ஒரு

லட்ச ரூபாய் பரிசுப் போட்டி முடிவு

தாயின் பரிவையும், சகோதரியின் அன்பையும் நான் பார்க்கிறேன். எந்த ஒரு விஷயமானாலும், அதனைச் சரியான கோணத்தில் பார்த்து, சரியாக ஜட்ஜ் பண்ணுவார். அடுத்தவர் சொல்கிறார் என்பதால் அப்படியே தலையை ஆட்டிவிட மாட்டார். அவர் கோபப்பட்டுப் பார்த்ததில்லை. ரொம்ப பொசிவ் குணம் கொண்டவர். தன் நண்பர்களை, குடும்பத்தினரை, உறவினர்களை எப்போதும் விட்டுக்கொடுக்க மாட்டார். ஜோ எனது வாழ்க்கையில் நிகழ்ந்த அதிர்ஷ்டம்.''



**'திருமணத்துக்குப் பின் நடிக்க மாட்டேன் என்று ஜோதிகா கூறிவிட்டார். அவரது நடிப்புத் திறமையை வீணடிப்பது சரியா?'** என்று கேட்டிருக்கும் நெய்வேலி டவுன்ஷிப்பைச் சேர்ந்த ஸ்ரீனிவாசனுக்கு சூர்யா அளித்த பதில்... ''நானோ, என்னுடைய குடும்பத்தினரோ ஜோவுக்குத் தடை போடவில்லை. நடிப்பதில்லை என்பது அவராகவே விரும்பி எடுத்த முடிவு. அவர் எப்போது மறுபடி நடிக்க விரும்புகிறாரோ, அப்போது தாராளமாக நடிக்கலாம். தடை ஏதுமில்லை. ஆனால், சும்மா வெறுமனே வந்துவிட்டுப் போகிற மாதிரியான படங்களில் அவர் நடிக்க ஒப்புக்கொள்ள மாட்டார். ரொம்ப வித்தியாசமான, பவர்ஃபுல்லாக, பேசப்படும்படியான கேரக்டர் என்றால் மட்டுமே நடிக்க ஒப்புக்கொள்வார் என்பது மட்டும் நிச்சயம்.''

திருச்சி வாசகி ஷீலா பாஸ்கரனின் கேள்வி இது: **'அருமையான தந்தைக்கு மகன், அன்பான மனைவிக்குக் கணவன்; குட்டிப் பாப்பாவுக்கு அப்பா. இவற்றில் உங்களுக்கு மிகுந்த ஆனந்தம் தருவது எது? ஏன்?'** கேள்வியைக் கேட்டவுடன், ரொம்ப குஷி மூடுக்கு வந்துவிட்டார் சூர்யா. மலர்ந்த முகத்துடன் ''சந்தேகமேயில்லை... குழந்தைக்கு அப்பா என்னும்போது ஏற்படும் ஆனந்தமே அலாதிதான். குழந்தை தியா எங்கள் இரண்டு பேருடைய கலவை. அவளுக்கு என் மூக்கு; ஜோவின் கண்கள். சிரிக்கும்போது இரண்டு பேர் சிரிக்கிற மாதிரியும் இருக்கு. ஆறாவது, எட்டாவது மாசத்துல, வயித்துல ஓர் உயிர் உருவாகி இருக்குன்னு நினைக்கிறபோதே தாய்மை மேல மதிப்பும் மரியாதையும் அதிகமாச்சு. ஜோ பட்ட சிரமங்களைப் பார்த்தபோது, நம்ம அம்மாவும் இதே மாதிரிதானே நம்மை பெற்றெடுக்கச் சிரமப்பட்டிருப்பாங்கன்னு தோணுச்சு. குழந்தை பிறந்த உடனே, அது எல்லா உறவுகளுக்கும் ஒரு புது அர்த்தம் கொடுக்குது. எங்களுக்குப் புது பொறுப்பைக் கொடுத்திருக்கா எங்க குட்டிப் பொண்ணு. பொண்ணு பிறக்கணும்னு ரொம்ப ஆசைப்பட்டோம்! ஆசைப்பட்ட மாதிரியே பிறந்திருக்கு. சந்தோஷமாவும் பெருமையாவும் உணர்கிறோம்.''

'கேள்வி கேட்ட வாசகர்களில் யாருக்கு கலர் டெலிவிஷன் பரிசு கொடுக்கலாம்?' என்பது சூர்யாவுக்கான நமது அடுத்த கேள்வி. எல்லா கேள்விகளையும் ஒரு நோட்டம் விட்டுவிட்டு, சில வினாடிகள் யோசித்த பிறகு, ''எனக்கு ஆனந்தம் தருவது எது?ன்னு கேட்டாங்களே அவங்களுக்கே டி.வி. கொடுத்து ஆனந்தப்படுத்திடுங்க'' என்றார் சூர்யா.

பரிசு பெற்ற வாசகி:

**ஷீலா பாஸ்கரன், தென்னூர், திருச்சி- 620 017**

வாழ்த்துக்கள் ஷீலா!

- எஸ். சந்திரமௌலி

படங்கள்: ஸ்ரீஹரி

# கிரிக்கெட் கோதாவில் சீனா!

செய்தித்தாளைத் திறந்தால், டி.வி.யைத் திருகினால் பி.சி.சி.ஐ., ஐ.சி.எல். என்கிற வார்த்தைகள் தான் கவனத்துக்கு வந்துகொண்டே இருக்கின்றன. கிரிக்கெட் உலகத்தை இந்த இரு புட்டிகளுக்குள் அடக்குவது எவ்வளவு விநோதம், வேடிக்கை!

கிரிக்கெட் என்பது இந்தியர்களுக்குக் கொண்டாட்டம். ஆஸ்திரேலியர்களுக்குக் கலை. கிரிக்கெட்டில் அவர்கள் பீம புஷ்டியுடன் இருப்பதற்குக் காரணம் புராதன பயிற்சி முறைகளிலிருந்து தொழில்நுட்பத்துக்கு மாறியதுதான். சோனி கம்பெனி தயாரித்துள்ள பி.எஸ்.பி., அதாவது கையடக்க கம்ப்யூட்டர் ஒன்று மார்க்கெட்டுக்கு வந்திறங்கியுள்ளது. இதில் வீடியோ பார்க்கலாம். கேம்ஸ் ஆடலாம். தங்களது நிறை குறைகள், எதிரணி வீரர்களின் ஆட்ட அலசல்கள் போன்ற பாடங்களுக்கு ஆஸ்திரேலிய வீரர்கள் இந்தக் கையடக்க கம்ப்யூட்டரைத்தான் பயன்படுத்தி வருகிறார்கள். ஐபாட் என்றால் சிறிய திரை. லேப்டாப் என்றால் வீண் சுமை. ஆனால் இந்த போர்ட்டபிள் கம்ப்யூட்டரை பாக்கெட்டில் சுலபமாக வைத்துக்கொள்ளலாம்.

* பி.எஸ்.பி.




ஜனவரி 2004-டன் வெங்கட்ராகவன் அம்பயர் தொழிலுக்கு முற்றுப் புள்ளி வைத்தார். பிறகு இன்று வரைக்கும் சர்வதேச அரங்கில் சொல்லிக்கொள்ள ஒரு இந்திய அம்பயர்கூட கிடையாது. நிலைமை பாழாய்ப் போவதை வேடிக்கை பார்க்கக் கூடாது என்று பி.சி.சி.ஐ. சமீபத்தில் நூறு இந்திய அம்பயர்களுக்கு ஒரு கேம்ப் நடத்தியது. ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த முதல்தர அம்பயர் சைமன் டஃபுல், ஆசானாக இருந்து டிப்ஸ் கற்றுக் கொடுத்திருக்கிறார். இங்கிலாந்து டெஸ்ட் தொடரில் டெண்டுல்கருக்கும் கங்கூலிக்கும் ஒரே சமயத்தில் தவறாக அவுட் கொடுத்தவர்தான் இவர். டெஸ்ட் முடிந்த பிறகு சச்சின் தீர்ப்புக்கு வருத்தம் தெரிவித்தார் டஃபுல். ஆனால் கங்கூலியின் தீர்ப்பை 'எத்தனை முறை வேண்டுமானாலும் மீண்டும் கொடுப்பேன்' என்றார். இந்த மன உறுதியும் செய்த தவறுக்கு மன்னிப்புக் கோரும் மனப்பான்மை

ச.ந.கண்ணன்

யும் இருப்பதாலேயே டஃபுல் உலகின் நம்பர் ஒன் அம்பயராகப் போற்றப் படுகிறார்.

டக்வொர்த் லூயிஸ் என்கிற விதி முறை கிரிக்கெட்டில் உண்டு. ஃபாராங்க் டக்வொர்த், டோனி லூயிஸ் என்கிற இரு கணிதப் பேராசிரியர்களால் மண்டையை உடைத்துக் கண்டுபிடிக்கப்பட்ட ஃபார் முலா இது. மழை, ரசிகர்கள் தொல்லை போன்ற சங்கடங்கள் குறுக்கிடும்போது டக்வொர்த் லூயிஸ் உதவியோடு ஸ்கோர் மாற்றி எழுதப்படும்.

இது குறித்த பல சுவாரஸ்ய அனுபவங் களைச் சமீபத்தில் டக்வொர்த் பகிர்ந்து கொண்டிருக்கிறார். ''1997ஆம் வருடத்தி லிருந்து இது நடைமுறைக்கு வந்துள்ளது. மழை வந்தால் மட்டும்தான் டக்வொர்த் லூயிஸ் விதிமுறையை அமல்படுத்த முடி யும் என்று நினைக்காதீர்கள். பதினைந்து ஃப்ளட் லைட் ஆட்டங்களில் மின்விளக்கு பழுதடைந்த காரணத்துக்காக உபயோகப் படுத்தப்பட்டுள்ளது. ரசிகர்கள் வன்முறை செய்ததால் மூன்று முறை. இங்கிலாந்தில் உள்ள டெர்பிஷையர் என்கிற பகுதியில் அவ்வளவு சுலபமாக வெயில் அடிக்காது. எப்போதும் மேகம் மூடியபடியே இருக் கும். வெயில் அடிக்கும் பட்சத்தில் கண்ணைக் கூசச் செய்யும். அப்படி ஒரு முறை வெயில் அதிகமாகி கண் கூசச் செய்ததால் ஆட்டம் தடைபட்டு டக்வொர்த் லூயிஸ் விதிமுறைப்படி முடிவு அறிவிக்கப்பட் டது. 2003 உலகக் கோப்பை இறுதிப் போட்டியில் ஆஸ்திரே லியா 359 ரன்களைக் குவித்தது. அடுத்து ஆட வந்த இந்தியா 23 ஓவர்களில் ஓரளவுக்கு ரன்கள் அடித்திருந்தது. அப்போது மழை வரும் அறிகுறி தென்பட்டது. மழையால் ஆட்டம் நின்றிருந்தால், விதிமுறைகளால் இந்தியா வென்ற தாக அறிவிக்கப்பட்டிருக்கும்! ஆஸ்தி ரேலியாவின் பெருழைப்பு வீணாகப் போயிருக்கும். நல்ல வேளை'' என்று பெருமூச்சு விடுகிறார் டக் வொர்த்!

* சைமன் டஃபுல்

கிரிக்கெட்டை உருப்படியாகப் பத்து நாடுகள்கூட ஆடுவதில்லை. அமெரிக்கா திரும்பிக்கூடப் பார்ப்ப தில்லை. 'நேர விரயமும் விளையாட் டின் போக்கும் எங்களுக்கு ஒவ் வாமை' என்று அவர்கள் சொல்லி விட்டார்கள். இப்போது இந்த கோதாவில் இறங்கவிருக்கிறது சீனா. ஆசிய கிரிக்கெட் அமைப்பினர் சீனா வுக்குச் சென்று நூறு பயிற்சி யாளர்களுக்கு கிரிக்கெட் விதிமுறை கள் மற்றும் அதன் சாதக பாதகங் களைப் போதித்து வந்துள்ளனர். விளைவாக சீன பள்ளிகளில் பி.டி. பீரியட் வந்தால் மாணவர்கள் பேட், பால், ஸ்டம்பைத் தூக்கிக்கொண்டு கிரிக்கெட் ஆட ஆரம்பித்துவிடு கிறார்களாம்.

சீனாவில் 2010ல் நடைபெறும் ஏஷியன் கேம்ஸ் போட்டியில் கிரிக்கெட்டும் சேர்க்கப்பட்டுள்ளது. அடுத்த இரண்டு ஒலிம்பிக்குகளில் அமெரிக்காவை சீனா முந்திவிடும். அப்போது சீனா கிரிக்கெட் விளையாடும் பட்சத்தில் இந்த விளையாட்டை உலகம் முழுக்கப் பரப்ப முடியும் என்று கவுன்சில் கருதுகிறது.

# மருத்துவரின்றி மாத்திரை வேண்டாம்!



"இன்றைக்கு ஐரோப்பிய நாடுகளைப் பொருத்தவரை ஆறு பெண்களில் ஒருவருக்கும், இந்தியாவில் நாற்பது பெண்களில் ஒருவருக்கும் மார்பகப் புற்றுநோயின் பாதிப்புகள் இருக்கின்றன'' என்கின்றார் வளசரவாக்கம் ஏ.என்.என்.மருத்துவமனையின் மகப்பேறு மருத்துவ நிபுணர் டாக்டர் சித்ரா சுந்தரராஜன்.

''மார்பகப் புற்றுநோய் என்பது மார்பகத்தில் தோன்றக்கூடிய தேவையற்ற திசுக்களின் வளர்ச்சியே. இந்தத் திசுக்களே நாளடைவில் கட்டிகளாக மாறி புற்றுநோயாக உருப்பெறுகிறது. ஆனால், மார்பகத்தில் தோன்றக்கூடிய எல்லாக் கட்டிகளுமே கேன்சர் கட்டிகள் என்று கூறிவிட முடியாது. பயாப்ஸி பரிசோதனை மூலம் மட்டுமே அவை கேன்சர் கட்டிகளா அல்லது சாதாரணக் கட்டிகளா என்பதை உறுதிபடுத்திக் கொள்ள முடியும்.

பெண்களுக்கு அதிகப்படியான ஈஸ்ட்ரோஜன் சுரக்கும்போதுதான் இந்த மார்பகப் புற்றுநோய் வருகிறது. இதனை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று பரம்பரை காரணங்களால் வரக்கூடியது. மற்றொன்று தானாகவே வரக்கூடியது. ஆரம்ப கட்டத்திலேயே இரண்டுக்குமே சிகிச்சை அளிக்க பட்டால் முற்றிலும் குணப்படுத்த முடியும்.



* டாக்டர் சித்ரா

**மா**ர்பகங்கள் முன்பைவிட பெரியதாகவோ அல்லது சிறியதாகவோ காணப்படுவதும், மார்பகத் தோலில் ஆரஞ்சுப் பழத் தோலில் உள்ளதுபோல புள்ளி புள்ளியாகத் துளைகள் தோன்றுவதும், மார்பகக் காம்புகள் வீக்கத்துடன் இருப்பதும், அதனை அழுத்தும்போது அதிலிருந்து இரத்தம் அல்லது மஞ்சள் நிறத்தில் திரவம் வெளிவருவதும்தான் இந்நோயின் முக்கியமான அறிகுறிகள்.

இந்தியாவில் நாற்பது வயதுக்கு மேற்பட்ட பெண்களையே மார்பகப் புற்றுநோய் அதிகம் பாதிக்கிறது. பாரம்பரிய காரணங்களால் இந்நோய் வந்தாலும், அதிகமான கொழுப்பு உடலில் சேர்வதும் சர்க்கரை நோய், இரத்த அழுத்த நோய் உள்ளவர்களுக்கும் இது அதிகமாக வரக்கூடிய வாய்ப்புகள் இருக்கின்றன. இவற்றையெல்லாம்விட, சிறு வயதில் பூப்படைவதும், ஐம்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டும் மாதவிடாய் வரத்து இருப்பதும்



**முதல் குழந்தைப் பேற்றைத் தள்ளிப் போடாதீர்கள்; தாய்ப் பால் தரத் தயங்காதீர்கள்!**

இந்நோயின் தீவிரம் அதிக மாகக் காரணங்கள். முப்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டு பெண்கள் குழந்தை பெற்றுக்கொள்ளும் போதும் மார்பகப் புற்றுநோய் வர வாய்ப்புகள் உண்டு. மருத்துவர்களின் ஆலோசனை இன்றி ஹார்மோன் மாத்திரைகளை உட்கொள் வதும் இந்நோய் வருவதற்கான சாத்தி யக்கூறை அதிகமாக்குகிறது.

**மா**ர்பகப் புற்றுநோய்க்கு Mastectomy அறுவை சிகிச்சை ஒன்றே முடிவான தீர்வாகும். மார்பகத்தில் காணப்படக்கூடிய கட்டிகள் புற்றுநோய்க் கட்டிகள்தான் எனத் தெரிந்தவுடன் அதனை உடனடியாக அறுவை சிகிச்சையின் மூலம் அகற்றினால் தான், அது மேலும் பரவாமல் தடுக்க முடியும். இந்த அறுவை சிகிச்சைக்குப் பிறகும் நோயாளியின் உடல்நிலை, நோயின் தீவிரம் இரண்டையும் பொறுத்து இரண்டுவிதமான சிகிச்சைகள் செய்யப்படு கின்றன. ஒன்று Chemotheraphy, மற் றொன்று Radiotheraphy. நோயாளியின் உடல் வலிமை, நோயின் தீவிரத்தைப் பொருத்து மருத்துவ நிபுணர்கள் சிகிச் சையை முடிவு செய்வர்.

**இ**ந்நோய் வராமல் தடுப்பதற்கு முக்கிய தேவை, இது குறித்து பெண்கள் மத்தியில் முழுமையான விழிப்புணர்வை ஏற்படுத்துவதுதான்.

அறுவை சிகிச்சையின் மூலம் புற்று நோய்க் கட்டிகளை அகற்றிய பிறகும், இந்நோய் மேலும் பரவாமல் இருக்க Tamoxifen என்கிற ஆன்ட்டி ஈஸ்ட்ரோஜன் கொடுத்துக் கட்டுப்படுத்தலாம்.

**பெ**ண்கள் தங்களின் முதல் குழந் தைப் பேற்றைத் தள்ளிப் போடாமல் இருக்க வேண்டும். பிறந்த குழந்தைக்குத் தாய்ப் பால் தரத் தயங்காதீர்கள். அவ்வப் போது BSE என்று சொல்லப்படும் breast self examination முறைப்படி சுயமாக மார்பு களைப் பரிசோதித்துக் கொள்ள வேண்டும். இதனை எவ்வாறு செய்வது என்று அவர வர் மருத்துவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஆறு மாதங்களுக்கு ஒரு முறை பெண்கள் தங்கள் மார்பகத்தை மருத்துவப் பரிசோதனைக்கும் உட்படுத்த வேண்டும். மார்பகத்தில் சின்ன பிரச்னை என்றாலும் அது குறித்து வெளிப்படையாக மருத்துவரிடம் பேச வேண்டும். எல்லா வற்றுக்கும் மேலாக முன்னோர்கள் யாருக் காவது மார்பகப் புற்றுநோய் இருந்திருந் தால் அவர்களுடைய சந்ததியினர் Mamography பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். இந்த Mamography சோதனை யின் மூலம் கண்ணுக்குத் தெரியாத கட்டி களையும் கண்டறிந்து அகற்றலாம். கொழுப்புச் சத்து நிறைந்த உணவு வகை களைத் தவிர்த்து, நார்ச்சத்துள்ள காய்கறி உணவுகளை உட்கொள்ள வேண்டும்.

மேற்கண்டவற்றைக் கடைபிடித்தாலே இந்நோய் வராமல் தடுக்கும் வாய்ப்புகள் அதிகம்'' என்கிறார் டாக்டர் சித்ரா சுந்த ராஜன்.

**- கமலி**

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**

# கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை



அன்புடன் அழைக்கிறது

# அமரர் கல்கி பிறந்த நாள் விழா

செப்டெம்பர் 9, 2007

(ஞாயிற்றுக்கிழமை)

பாரதிய வித்யாபவன் அரங்கம்,

மயிலாப்பூர், சென்னை - 600 004

மாலை 6:00 மணி

இளம் இசைக் கலைஞர்கள்

**ரஞ்சனி ஹெப்பார்**

**அக்கரை சுபலக்ஷ்மி**

ஆகியோருக்கு விருதுப் பத்திரங்கள் வாசித்தளித்து,
அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவுப் பரிசுகளை வழங்குதல்

தலைமையுரை :

பாரதிய வித்யாபவன் சென்னை கேந்திரத்தின் தலைவரும்
முன்னாள் டி.ஜி.பி.யுமான திரு **வி.ஆர்.லக்ஷ்மிநாராயணன்**

மாலை 6 : 45 : **இன்னிசைக் கச்சேரி**

| | |
|---|---|
| ரஞ்சனி ஹெப்பார் | : பாட்டு |
| அக்கரை சுபலக்ஷ்மி | : வயலின் |
| டெல்லி ஸாய்ராம் | : மிருதங்கம் |
| ஹெச்.பிரஸன்னா | : கடம் |

*அனைவரும் வருக!*

# ஆண்டவன் கொடுத்த கை எதற்கு?



**ஆண்டவன் கொடுத்த கால் எதற்கு...?**
**அரவிந்த் ஜோராய் நடப்பதற்கு!**

**– கல்கி,** கோகுலம் அலுவலகத்திலிருந்து கிண்டி ரயில் நிலையம் வரை நடப்பதற்கு அலுத்துக் கொண்ட குழந்தையைக் குஷிப்படுத்த (1980களில்) அழ.வள்ளியப்பா எழுதிய கவிதை இது!

இன்றைக்கு நம் குழந்தைகளிடம் ஆண்டவன் கொடுத்த கை எதற்கு என்று கேட்டால், என்ன பதில் சொல்வார்கள் என்பது சிந்தனைக்குரியது. ஆனால் இந்தியாவில் உள்ள பெரியவர்களை, அதுவும் அதிகாரப் பொறுப்பில் இருக்கும் மிகப் பெரியவர்களிடம் இக்கேள்வியைக் கேட்டால், ''அடித்து நொறுக்கி அழிப்பதற்கு!'' என்று சொல்வதோடு நில்லாமல், நம்மையும் இரண்டு போடு போட்டு அனுப்பக்கூடும்! சமீபத்தில் இரண்டு சம்பவங்கள் இந்தப் போக்குக்கு சாட்சி சொல்கின்றன.

**சம்பவம் 1 :** பீஹார் தர்பங்காவைச் சேர்ந்த சிவகுமார் சஹானி, கண் பார்வை இழந்து மருத்துவமனையில் துடித்துக் கொண்டிருக்கிறார். அவர் கண்களில் ஆஸிட் ஊற்றிவிட்டார் அந்த ஊரின் முக்கியபதி! முக்கியபதி என்பவர் பெண் பஞ்சாயத்துத் தலைவரின் கணவர் (பதி)! இவர்தான் புராக்ஸி தலைவர் என்று சொல்லத் தேவையில்லை.

சிவகுமார் செய்த தப்பு...? வெள்ள நிவாரணத் தொகையைத் தரும்படி கேட்டதுதான்! தோமாரியா கிராமத்து நிலமற்ற விவசாயி சிவகுமார். டீக்கடை நடத்தி தமது தந்தை, மனைவி, இரு பெண்களைக் காப்பாற்ற அன்றாடம் போராடிக் கொண்டிருப்பவர்.

சிவகுமார் பேரில் ஏற்கெனவே சில கிரிமினல் வழக்குகள் உள்ளன. அவர் துப்பாக்கியுடன் வந்து தம்மை மிரட்டியதாக போலீஸ் புகார் கொடுத்திருக்கிறார், ஆஸிட்டை ஆயுதமாக்கிய மகானுபாவர் கப்லேஷ்வர் முக்யா.

''என் கையில் துப்பாக்கி இருந்திருந்தால் இந்த கதிக்கு ஆளாகியிருப்பேனா!'' என்று அரற்றும் சிவகுமாருக்கு நீதி கிடைக்குமா என்பது தெரியாது; ஆனால் கண் பார்வை கிடைப்பது துர்லபம் என்று சொல்லிவிட்டனர் டாக்டர்கள்.

**சம்பவம் 2 :** அதே பீஹாரில் பகல்பூர் மாவட்டம். தங்கச் சங்கிலியைப் பறிக்க முயன்ற ஒரு திருடனைப் பிடித்து, சுற்றி இருந்த எல்லோரும் தர்ம அடி கொடுத்து நொறுக்கியிருக்கிறார்கள். பறந்து வந்த போலீஸ், அடித்தவர்களைத் தட்டிக் கேட்கவில்லை. திருட முயன்றவனை மோட்டார் சைக்கிளுடன் இணைத்துக் கட்டி, தரதரவென்று சாலையில் அவனை இழுத்தபடி பைக்கை ஓட்டியிருக்கிறது. அவன் மயங்கி நினைவிழக்கும்வரை நிறுத்தாமல் நடைபெற்றிருக்கிறது இந்தச் சித்திரவதை!

கிரிமினல் குற்றங்களைச் செய்தவர்களைக் காட்டிலும் இப்படித் தடியெடுக்கத் துணிந்த தண்டல்காரர்கள் எவ்வகையில் சிறந்தவர்கள்?

சிபு ஸோரன்களுக்கும் சஞ்சய் தத்களுக்கும் சட்டம் வளைந்து கொடுத்து பொறுமையாகக் காத்திருக்கிற நாட்டில், சிவகுமார்களைப் போன்ற சாதாரணர்களுக்கு நீதி கிடைப்பது கஷ்டம்தான். நாளைய குழந்தைகளின் பால பாடல் வரிகள் மாற்றி எழுதப்பட்டு வருகின்றன: 'ஆண்டவன் கொடுத்த கை எதற்கு..? அடித்து நொறுக்கி அழிப்பதற்கு!' ●

## ஆசிரியர் பக்கம்

